ரிடத்தில் நானுரைத்ததாக இவையெல்லாம் தெரிவித்து, எப்படியாயினும்அப்பாதகனுகிய முஞ்ஜன்மீது படையெடுத்துவரும்படி செய்யவேண்டும்! நானும் அதற்குள் இவ்விடத்திலிருந்து தகுந்த ஏற்பாடுகள் செய்து, பிரஜைகளை யெல்லாம் முஞ்ஜனுக்கு விரோதமாய் எழுந்தெதிர்க்கச் செய்விக்கின்றேன்! நீ சீக்கிரஞ் செல்லவேண்டும்.

காளி:—இதுவே நம் ஸேனைத்தலைவர் வத்ஸராஜருடைய அபிப்பிராயமும். அவரும் ஸமயத்தில் நம்முடன் சேர்ந்து கொள்வதாக வாக்களித்தனர்! எல்லாந் தெய்வாநுகூலத்தால் ஸுகமாகவே முடியுமென்று நினைக்கின்றேன்!

புத்தி:—வத்ஸராஜரே! இப்பொழுதுதான் உமது குணங்களையுள்ளபடி அறிந்து மெய்ச்சுகின்றேன்! நல்லது! காளிதாஸ, நீ சீக்கிரம் வீட்டுக்குச்சென்று, வேண்டியவற்றைச்சேகரப்படுத்திக்கொண்டு, விரைவாய் உஜ்ஜயினீ நகரஞ்செல்! நானும் மேலேநடக்கவேண்டிய விஷயங்களை யாலோசித்து நடத்துகின்றேன்! இனியொரு நிமிஷமேனுந் தாமதித்திருக்கலாகாது.

(இருவரும் நிஷ்கிரமித்தல்.)

முதற்பாகம்

முற்றிற்று.





# நான்காம் அங்கம்.

## முதற் களம்.

இடம்:—தாரைநாட்டுக்கும் உஜ்ஜயினி நாட்டுக்கும் மத்தியில் ஒரு பயங்கரமான காந்தாரம்.

(போஜன் துயரப்பட்டுக்கொண்டே [illegible] மெய்வருத்தத்துடன் பிரவேசித்தல்)

போஜன்:-(கருணையாய்ப் பாடிக்கொண்டு)

இராகம் - பூரிகல்யாணி. தாளம் - ரூபகம்.

பல்லவி.

அபயம் சிவனே!
ஆபத்பாந்தவனே!

அநுபல்லவி.

உபயப்பிரஷ்டனாகி - ஒன்றியாய்ப் போகின்றேன்,
அபயந்தந்தென்றனை - ஆபத்[illegible]க்குவாய்!—அபயம்.

சரணங்கள்.

நாடுநகரும்விட்டு - நடக்கக் குதிரை யற்றுங்
காடுமலைகளின்று - காலாற் கடக்கலானேன்!— அபயம்.

பதியும் ஸதியுமென்றன் - பங்காளி கைக்கொள்ளக்
கதியற்றுங் கசடன்போற் - கானகம் புகலானேன்!—அ.

நீசரண்யனே - தேவாதிதேவனே!
நீநன்யான்படுந் துயர்-தெரியாதோ வுனக்கின்னும்?—அ.

ஹே ஈசா ! நான் இப்படி நாடிழந்து, நகரிழந்து, காட்டிலே வந்து, பனியால் நனைந்து, வெயிலாலுலர்ந்து, தனியாய்க்கிடந்து, மெய் சோர்ந்து மெலிந்துபோதல் நின் கருணைக்கழகோ? காலைமுதல் இதுவரையிலும் இக்கொடுங்காட்டிலலைந்து திரிகின்றேன் ! ஒரு மநுஷ்யப்பிராணியையும் இப்பயங்கரமான பிரதேசத்திற் காண்கிலேனே ! இரவோ கொடியவர்களின் இருதயம் போல் மிகவும் பயங்கரமான இருளுடன் வந்து விட்டது ! அப்படியே,

> செந்தழற் கதிரோன் சேர்ந்து
> சிந்துவி னலையின் மறைந்த,
> பந்தமென் றுடுக்கள் தோன்றப்
> பறவைக ளடங்கக் கூட்டில்,
> மந்தமா யடுத்த காற்றும்
> மரங்களி லாய்ந்து நிற்க,
> அந்தமி லிருளாற் சூழ
> வடங்கின வேலைக ளியாவும் !

ஐயோ! பசிதாஹம் மேலிடுகின்றதே! எங்கேயாகிலுஞ் சென்று ஒரு கைத்தண்ணீர் குடித்துத் தாஹசாந்தியாயினுஞ் செய்யலாமென்றால், கண்ணுக்கெட்டியவரையில் ஒருபொட்டு நீராயினுங் காணப்படவில்லையே ! அந்தோ! இப்பயங்கரமான காட்டில் யாரைக் காணுவேன் ? எவ்விதம் பிழைத்திருப்பேன் ? இந்த ஸமயத்தில் யாரெனக்குதவி பண்ணுவார்கள் ? எல்லோரும் பலவானுக்குத்தானே அநுகூலஞ் செய்வார்கள் ! யாருக்கென்றன் குறைகளையுரைப்பேன்! எப்படி நான் இக்கஷ்டங்களையெல்லாம் பொறுப்பேன் ? யான் இன்னுமென்று பிறருடன் சொல்வதற்குக்கூட வெட்கமாயிருக்கின்றதே ! ஆ சிற்றப்பா ! உனது தந்திரமே தந்திரம் ! இவ்வற்ப ராஜ்ஜியத்திற்காசைப்பட்டு என்னை எவ்வித ஸ்திதிக்குக் கொண்டுவந்துவிட்டனை ?

யான், உனக்கு யாது தீங்கிழைத்தேன்? ஆஹா! நின் ஆசையின் மயக்கமே மயக்கம்!

தாயென்றுந் தந்தையென்றும்
தம்பியர் தமையரென்றும்
சேயென்றுஞ் சுற்றமென்றும்
சேர்ந்ததொன் றுமொன்றோ!
மாயமா மாயையென்றும்
பாதுகை வலையிற் சிக்கிச்
நீயனை யாருஞ் செய்வர்
சிறுதாமஞ் சாலெ தற்றூர்!

அடே துரோகி! நான் பரியைப் பறிகொடுத்ததற்காகத் துயரப்படவில்லை! எனது ஆசை நாயகி விலாஸவதியைவிட்டுவந்ததற்காகவும் வியஸநப்படவில்லை! இப்பரதகண்டம் முழுவத்தையும் ஆள யான் ஏகசக்கிராதிபதியாய் வருவேனென்று பெரியோர்கள் சொல்லினரே, அதற்கும் யான் ஆசைகொள்ளவில்லை! நிர்மலமாகிய யசோவர்மனுடைய வயிற்றிலுதித்து, என்னைப்பத்து மாதஞ் சுமந்து, நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்த என் தாயைக்குறித்து மாத்திரம் வியஸநப்படுகின்றேன்! ஹா! அம்ப கசிப்பிரபா! இப்பாவியேன் ஏன் உன் வயிற்றில் ஜநித்தேன்? நீ என் கதியைக் கேள்விப்படுவாயாயின் உன்மநம் எவ்வாறு பரிதவிக்கும்? ஐயோ உன்னை யார் ஸமாதானஞ்சொல்லி ஆற்றுதலடைவிக்கப் போகின்றனர்! ஹா! ஹதவிதி! ஹதவிதி!! என்னகாலம் நேர்ந்துவிட்டது! ஐயோ! நான் எதற்கென்றழுவேன்? என்னையே பந்துவாக நினைத்திருந்து இப்பொழுது இக்கொடுங்கோல் மன்னனிடத்திலிருந்து கஷ்டப்படும் என் தந்தையார் ஆண்டுவந்த பிரஜைகளின் பொருட்டு அழுவேனோ? என்னிடத்தில் உள்ளன்பு பராட்டி மேலுக்கு மாத்திரம் கண்டிப்பா

யிருப்பவர்போல் காட்டிவந்த எனதுபரமாசாரியரான புத்திஸா கரரை நினைத்து அழுவேனே? எனக்குக் கண்ணுக்குக் கண்ணாய் என்னுடல்போல் என்றும் பிரியாதிருந்த எனது நண்பன் காளிதாஸனைக்குறித்து அழுவேனே? ஒரு கஷ்டமுமறியாத எனதருமைத்தாய் இச்செய்தியைக் கேட்டுப் படப்போகின்ற வருத்தத்தை நினைந்து அழுவேனே? அல்லது இவ்வளவு கஷ்டங்களையெல்லாமடைந்தும், கற்போலக் கரைந்துருகாத என்பொருட்டுத்தான் அழுவேனே? அந்தோ! உயிரை மாய்த்துக்கொள்வோமென்றாலும் மஹா பாதகம் நேர்ந்துவிடுமே! ஆன்மஹத்தி செய்கிறவர்கள் அந்த தாமிஸ்ர நரகங்களில் விழுந்து இடைவிடாது தவிப்பரன்றோ?

"அஸூர்யா நாம தே லோகா
அந்தேந தமஸாவ்ருதா:।
தாம்ஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி
யே கே சாத்மஹநோ ஜநா:॥"

["அஸூர்யா நாம தே லோகா
அந்தேந தமஸாவ்ருதா:!
தாம்ஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி
யே கே சாத்மஹநோ ஜநா:"]

என்றல்லவோ மறைகளெல்லாம் முறையிடுகின்றன! ஐயோ யான் என்செய்வேன்? எவ்விடஞ் செல்வேன்? ஒன்றுந்தெரியவில்லையே! ஈசா! உன்னைத்தவிர எனக்குவேறு கதியுமுண்டோ? நீ தான் இவ்வேழையை இத்தருணமுங் காப்பாற்றவேண்டும்.

**இராகம் - கமாஸ். தாளம் - ரூபகம்.**

**கண்ணிகள்.**

கருணைபுரிந்தென்றன் - கவலை தீராயோ
தரையிற்றவிக்குமெனை - திரும்பிப் பாராயோ?

ஞுடவியிலமுமென்னி - தன்புவைப்பாயோ
ப்டமுடியாதென்றான் - பசியைத்தீர்ப்பாயோ !

ஐயோ ! என்னவோ மயக்கம் வருகின்றதே ! இதோ இம்மரத் தடியிற்சென்று சற்றுச்சயனித்துக்கொள்வோம் ! (அப்படியே மரத்தடியிற்சென்று) ஈசா ! நீதான் இவ்வேழையின் கஷ்டத் ஷதை நீக்கிக் காத்தருளவேண்டும் ! (சயனித்துக்கொண்டு)

*"க [illegible] ! [illegible] ! என் [illegible] ! [illegible]
[illegible]!"

*"எ [illegible]
[illegible]!"

*"இ [illegible] ? [illegible]
[illegible]!"

(சோர்ந்து நித்திரைபோதல்)

(ஜயபாலனைச் சேர்ந்த வீரன், சூரன் என்றயிரண்டு பில்லர் கள் பாடிக்கொண்டே பிரவேசித்தல்).

வீர:—(ஒரு கட்பாண்டத்தை கையிலெடுத்துக்கொண்டு,
ஓடிவுழல்றேன் காடெல்லாம் சுற்றி
வாடி வதங்கினேன் யான் !
நாடி யுன்னைக் கூடிக் குடிக்கத்
தேடித்திரிந்தேனே !

சூர:—(பெருமூச்சு விட்டுக்கொண்டு)
போதுமென்னப்பனே போதும் போச்சுது
வாது செய்கிறாயே !
ஏதினி கில்லா தென்னுயிர் சுரையை
மாதிரி பாராமே!

* தருமரானவர்.

வீரன்:—அடா அப்பா ! இன்னிக்கிப்பட்ட பாடுபோதும் போதும் ! இனிமேலே ஆயுசுக்கும் வேண்டாம் !

சூரன்:—காடெல்லாம் சுத்தியடிச்சாண்டா அந்தப்பர்வி ! கை கால் எல்லாம் ஜிவ்ஜிவ்வென்று வலிக்குதுரு !

வீர:—போவுது ! எவனுவது ஆப்பட்டானு? இவ்வளவு கஷ்டப்பட்டத்துக்கு இப்போதென்ன வாயிலடிச்சிக்கிறது ?

சூ:—சாமீ ! போரும் போரும் ! இன்னிக்கி எவன் மூஞ்சியிலே முழிச்சனே, காலமே முதல்கொண்டு ஒரு பருக்கை கூட கிடையாது !

வீர:—பின்னே என்னடா வயித்தெரிச்சல் ! (கையிலிருக்கும் கட்பாண்டத்தை நோக்கி) இது இராத பூட்டாக்கே நம்ப சத்துதாண்டா போகணும்.

இராகம் - பியாக். தாளம் - சாப்பு.

பல்லவி.

சார மிவ்வுலகில் மதிரா
சாராயம் சுரையே !

அநுபல்லவி.

சோறுமே வேண்டோம், மற்ற
சுகங்களையும் வேண்டோம் !—சா.

சரணம்.

பனங்கள்ளும் பனஞ்சாறும்
பானம் பண்ணியே,
தங்கம் வேறொன்றும்
சற்றும் வேண்டோம் !—சா.

சூ:—வயித்தெரிச்சலா ? பின்னெயும் வயித்தெரிச்சல் ! எங்கப்பன் அந்த சாணுரப்பய்யன் நல்லாயிருக்கணும் ! (வீரனிடத்திலிருந்து கட்பாண்டத்தைக்கையில் வாங்கிச்கொள்ளுதல்)

வீ:—ஆம்டா! அவன் இருக்கானே மெத்த நல்லவண்டா? இன்னிக்கி நாம்ப பாடு பட்டுவந்ததைப் பார்த்துவிட்டு அவனே ரொம்ப கள்ளு ஊத்திக்கொடுத்தாண்டா!

சூ:—(கட்பாண்டத்தை வாயண்டை கொண்டுபோய்) அடே மினுக்குதடா! (பூ என்று நுரையை ஊதி) கள்ளுக்குச் சமானமென்னடா யிருக்குது. இதைத்தாண்டா அந்த பாப்பாருங்க, இப்படிக்கொத்த கஞ்சாவோடே கலந்திட்டு அமுதம் அமுதமென்று பூரா அடிக்கிறாங்கோ! (கஞ்சாவை கொஞ்சமுட்கொண்டு பாடுதல்)

அஞ்சிலி பிஞ்சிலி கஞ்சாவே
ஆநந்தமாகவே வளர்ந்தாயே!
பிஞ்சானுமில்லன்ன பூவானுமிலன்ன
பெரியகடையில் கண்டேனே!

திட்டுமெடுத்துக் கொண்டேனே
துண்டு துண்டாக விடித்தேனே!
குட்டையிலே குளத்திலே தள்ளாதே
குருவுக்கும் புண்ணியம் கஞ்சாவே!

சிக்கினில் போட்டுச்
சிலும்பிலடைத்து, அதன்மேல்
அக்கினி பகவானைமூட்டி
அம்மானை யினைதேதார் தம்மிழுத்தாக்கா

முப்பத்துமுக்கோடி தேவர்களெல்லாம்
முகத்தின்முன்னின்று நடனஞ்செய்வாரே!

தம்பீ! என்னப்போ? (பற்களைக் கடித்துக்கொண்டு) பினிக்குதடா! பினிக்குது!!

வீ:—அண்ணே! இந்த பச்சைமுளகாயை கடிச்சிக்கிண்டையான நல்லாயிருக்கும். (மடியிலிருந்த மிளகாயை யெடுத்துக்கொடுத்தல்)

சூ:—(மிளகாயை வாங்கிக் கடித்துக்கொண்டே மறுபடியும்கொஞ்சம் கள்ளருந்தி) ஆமாந் தம்பி! (தலையை யசைத்து ருசியை அபிநயித்து) என்னமாயிருக்குதுன்றே? (ஆட்டம் ஆடிக்கொண்டு) வெகு சொகுசு! (மறுபடியும் கொஞ்சம் தொட்டையிட்டுக்கொண்டே கள்ளருந்தி மயக்கங்கொண்டு) அண்ணே! நாம்பளங்கே யிருக்கோம்?

வீ:—(சிரித்து) அடா! மானத்திலே யிருக்கோமடா!

சூ:—(பூராய்க்குடித்துவிட்டு) என்ன வெதல்லரே! வழ்ழ் (ஏப்பம் விட்டு) என்னரா? மா மா மானத்திலேயா? வழ்ழ்ழ் (திரும்பியும் ஏப்பம்விட்டு) மா மா மா மானத்திலே குசூசூசூசூரியன் தம்பி.

வீ:—என்னடா ஜாஸ்தியா குடிச்சிட்டையோ? (கட்பாண்டத்தை திமிர்ந்து பார்த்து) சற்றெ! சரிதான்! பூராவிட்டுட்டே!

சூ:—யார்ரா ராவன் நம்பளாண்டே ஜாஸ்தியா பேஷாது? என்றே மோ! பபபபபக் கிரம்! நம்ளெபாத்தென்னபா பாத்துக்கிணே! நாம்பவத்தபவத்தபவத்தவத்மான்! வேதவேதவேத வேதவ நன்!!

வீ:—என்னடா குடிச்சிட்டி உளற்றே! என்டா அல்லாத்தையும் குடிச்சிட்டையோ?

சூ:—யார்ரு குடியன்? நீ குறியனுடா நான் குறி குறி குறியனுடா? (வீரனைப் பிடிக்கப்போய்க் கீழே விழுதல்).

வீ:—(சூரனைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு) அடே! இந்த மொட்டைப்பசங்கத்தனத்தை நம்பளாண்டே காட்டாதே ன்னு எத்தனைவாட்டி சொல்லியிருக்கேன்.

சூ:—(வீரனை ஒருமரம் என்று நினைத்துக்கொண்டு கையால் ஆட்டிக்கொண்டு) மாமா தம்பி! மர்ர்ர் மா யிது?

வீர:—என்னடா மொட்டைப்பயலே! ஓதைக்கிறேன் பார்! விடுடா !! (சூரனை ரண்டுரே உதைத்துத் தள்ளுதல்).

•சூர:—(மெள்ள எழுந்து உட்கார்ந்து) அழே ! மொழ்மே கிழ்மே எண்ணெயோ பபபபபபல்லே தட்ஷிப்போழுவேன் ! நநநநம்பளே என்னென்று பாபாபாபாழ்த்திண்டே ! வொவொ வொவொருகுத்து ! (முன்னுக்குக் கை ட்டுவதுபோல் வினைத்து பின்னுக்குப் போதல்).

வீர:—(ஆத்மகதமாய்) நமக்கு வயிரெல்லாம் நெறையபசி யாயிருக்குது ! இந்தப் பட்டி மவனோட்ட நாமகென்ன வீம்பு ? தண்ணீ சொகுசாதான் இருக்குதுபோலத் தோணுது ! நம்ப ளுங் கொஞ்சங் குடிப்போம் ? (கீழேயிருக்கும் கட்பானையை எடுத்துப்பார்த்தல்).

சூர:—ஹ ஹ ஹ ஹ ! அட்டாஷஷ்மே !

வீர:—வடுவாப்பயல் அல்லாத்தையுங்குடிச்சிட்டாண்டா ! அத்தான் தூக்கியடிக்குது பயலே. (மிகுதி கள்ளை ஒரு பொட் டும் விடாமல் குடித்துக்கொண்டு) என்டா ! என்னடா ! கனே க்கிறே ! மூக்குமட்டும் வத்திட்ட மொழுப்போடா ? அவ் ! (மெள்ள ஏப்பம் விடுதல்).

சூர:—ஆம்மாண்டா ! ஹா ! ஹா ! ஹா ! ஹா ! பூழ்ச்சி யே குழிச்சேம் ! (பாடிக்கொண்டு) அம்மாயி ! அம்மாயீ !!

வீர:—பட்ட கஸ்டங்களுக்கெல்லாம் இது தாண்டா நல்ல மருந்து ! ஆத்தாடி ! கால் வயிறுகூட ரொம்பலே ! அதுக் குள்ளே பூமியெல்லாம் சக்கரம் உருளேப்போல சுத்துது !

சூர:—ஹி ! ஹி ! ஹி ! ஹி ! ஹொ ! ஹொ ! ஹொ ! ஹொ ! (பாடிக்கொண்டு) அம்மாயி ! அம்மாயி !! அம்மாயி அம் மாயி அம்மாயி அம்மாயீ !

வீர:—என்னடா ! அம்மாயியை வினைச்சிக்கிட்டையோ ! நேத்திராத்திரி ரொம்ப மலப்புதானே ?

சூர:—ஆட்ர்ரா ! பூ ! பூ ! பூ ! பூ ! புசும் ! (மூக்கால் வீர ன்பேரில் எச்சில் தெறிக்கத்துப்புதல்).

வீ:—என்னடா ! மேலே எச்சிலே துப்பரயே ! வேணு மோடா பூசை !

சூ:—தூ ! தூ ! தூ ! தூ ! (திரும்பியும் வாயாலெச் சிலேத் தெறித்தல்).

வீ:—வண்டா ! சும்மாயிருக்கேன்னிட்டு மேலே மேலே ஏர்ரையோ? பார்த்துக்கோ! இதோ உன்னைக் காலேவாரி யிழுத் துப்போட்டுர்ரேன் ! (ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டு கைகலந்து புரளுதல்).

(காலபாசன், விருபாக்ஷன் என்னும் ஜயபாலனைச் சேர்ந்த வேறிரண்டு பில்லர்கள் பரபரப்புடன் பிரவேசித்தல்).

காலபாசன்:—தம்பி ! இவ்வளவு நேரமாச்சே ! அவங்க வந்திட்டிருப்பாங்களோ ? இன்னிக்கி ராசாமவன் பட்டணத் திலே யில்லேயாம் ! அங்கே தான் போய்க் கொள்ளையடிக்கவே ண்டுமாம் !

விருபாக்ஷன்:—ஆமாண்ணே ! அந்தப் பயங்க இருக்காங் களே, வீரனும் சூரனும், நமக்கு முன்னே வந்தாங்களே ! எங் கே போயிருப்பாங்க ?

கால:—அந்தத் திருட்டுப் பயங்களா? சாணுங்கடைதான் ஒண்ணு இருக்குதோ இல்லேயோ ? வேறே எங்கே போயிருப் பாங்க ?

விரு:—ஆமாண்ணே ! அங்கேதான் போயிருப்பாங்க ! அதிலெயும் அந்தப்பய்யனிருக்குரானே சூரன்! அவன் மோடா க்குடியன் எங்கிறேன் !

காலா:—போடா ! போடா ! மொடாக்குடியனு ? பிப்பா குடியண்டா ! அவன் சம்பாதிக்கிற துட்டெல்லாம் பின்னே

எங்கே போவுதுண்ணு பார்த்துக்கிட்டே ! அந்தத்தண்ணிக்கு த்தான் எல்லாம் போவுது !

விரு:—(நோக்கி) நில்லுண்ணே நில்லு ! இங்கே எவங்க ளோ ஒத்தன் மேலே ஒத்தன் விழுந்து கட்டிக்கிட்டு சண்டை போர்ராங்க ! (இருவரும் பார்த்தல்).

சூர:—ஏண்டா ! போருடா ! இனிமே நம்பளண்டே வா யாடினையோ மண்டையை ரண்டாய்ப் பொளந்துடுவேன் ! (வீர னைக்கீழே தள்ளி யமுக்குதல்).

வீர:—அடே ! உனக்கு ஏதோகட்டிக்கிண்டதின்னேனிக்கி ! என்னைக்குரியாய் விட்டுடு ! இல்லாட்டா— (எழுந்திருப்பதற் குப்பிரயத்தநப்படுதல்).

சூர:—இல்லாட்டா என்னடா செஞ்சிடுவே ? இனிமே என் சோலிக்கி வராதே ! வராதே !! வராதே !!! (முதுகில் தன் னினபடி குத்துதல்).

வீர:—ஐயோ ! பூட்டேன் ! அம்மாடி பூட்டேன் !! எப் பாடா பூட்டேன் !!!

கால:—அடே ! அந்தத் திருட்டுப் பசங்கதாண்டா இங் கே குடிச்சிட்டு சண்டை போர்ராங்கோ !

விரு:—அடே திருட்டுப்பயங்களா ! இங்கே என்னடா பண்றீங்க ? விடுங்கடா ! நம்ப யசமான் பெத்த கோவித்துக் கொண்டிருக்கிறாரடா !

சூர:—(வீரனை விட்டுவிட்டு) அடே ! ? சத்தேகோவித்து கோடா பார்ப்போம் ! என்னமோ பலே பேசரையே ! வீரனு க்கு விழுந்த உண்டை உனக்கும் வேணுமோ ?

விரு:—அடே முட்டாள் ! என்னடா எசமான் கோவித் துக்கொள்ளுகிறாரென்றால் நீ கோவித்துக்கொள் பார்ப்போ மென்கிறையே ?

சூர:—பின்னே என்னடா? நாங்கள் தான் சோறு தண்ணி கூடயில்லாமல் அப்போபிடிச்சு அலெஞ்சிட்டு இங்கே விழுந்து கடக்கிறேமோ! அதுக்குள்ளே கோவமென்னடா?

பால:—போயிட்டு போவுது! அவனாடா கீழே! வீரனடா?

சூர:—ஆமாண்டா? அந்த ஊளைப்பயல் நம்பளண்டை வாலாட்டப்பார்த்தாண்டா!

கால:— அல்லடா! அவனைப்பத்தி நான்சொல்லலேடா? அதோ அந்த மரத்தின் கீழே யாரோ படுத்திக்கொண்டிருக்கிறுப்பலே யில்லே?

வீர:—(எழுந்து உட்கார்ந்து, உடம்பைத் தடவிக்கொண்டு) ஆத்தாடி! இப்போதான் உயிர்வந்தது!

சூர:—இந்தக் காட்டிலே எவங்கடா யிருக்கப்போறங்கோ! எதானு புலி கரடி படுத்திருக்கும்! வேறெ என்ன இருக்கப்போவுது?

கால:—இல்லேயடா! ஆ வேணுமானு எழுந்திருந்தப்பாரேன்! அதோ என்னமோ கிடக்கப்பா தெரியலே?

வீர:—(நோக்கி) என்னமோ மூச்சுக்குரல் கூட கேட்குதடா!

விரு:—இல்லேயடா! இந்த மரத்தில் இரத்தக் காட்டேரியிருக்கு மென்பாங்க! ஒருவேளை அதுவாதாண்டாயிருக்கும்.

சூர:—அம்மாடி! அதுவாயிருந்துச்சுனு நம்பளே பாத்தா டட்டீக்கே சும்மாவிடுமா? அத்தோடே ஆள் பைசல்தானே!

வீர:—(நடுங்கிக்கொண்டு எழுந்து) என்னுழ்ழா? ழ்ழ்ழ் ழ்ழத்தக்காட்டேரியா? ஐயோ நாநாநாநான் பத்திரம் (ஓடுதல்).

பால:—இல்லேயடா! இது என்னமோ வேறெதாண்டா படுத்து யிருக்குது! (அருகிற்சென்று நோக்கி, பாடுதல்)

**இராகம்-நாதநாமக்கிரியை. தாளம்-அடதாளம்.**

நில்லுங்கள் வருகிறாளே பிசாசு! —(பயந்து) அல்ல
கொல்லும் பருத்துக் கொழுத்தபிசாசு!
அப்பப்பா! இது என்ன ரூபம்—ஐயோ!
தப்பிப் பிழைப்பதே மெத்த ப்ரயாசம்!— அப்ப!

சூ:—(வெகு தைரியத்துடன் அருகிற்சென்று)
அடியுங்கள்! பிடியுங்கள்! காளி—(பயந்து) அம்ம!
குடியைக் கெடுக்கும் கொடியமூதேவி!— அப்பப்பா

வீ:—(கோபத்துடன் சிறைக்கு சமீபத்திற்சென்று)
திருட்டுப் புரட்டுப் பசாசி!—(பயந்து) ...
இருட்டில் விரட்டு மிரத்தக்காட்டேறி!— அப்பப்பா!

விந:—(வெகு தைரியமுள்ளவன் போல் முன்வந்து)
அடபோடா! இவளாரோ கிலி!—(பயந்து) பூசப்
பனை...ப் பவனிபோம் பட...!— அப்பப்பா!

எல்லோரும்.—(பயந்து பக்தியுடன்)

அம்மா! அக்கா! ஆயே! தாயே!—(கைகூப்பி) எம்மைச்
சும்மா விட்டுச்செல்லும் வந்தனம் தாயே!— அப்பப்பா!

சூரன்:—(சற்று யோசித்து) அடே! இல்லையடா! இது என்னமோ பேசாமெ படுத்துக்கிறாயிருக்குது. அப்பா! நாம்ப கூச்சப்போட்டத்துக்கு பிசாசு காட்டேரி காளி யிவளாயிருந்தாக்கா நம்மளே இந்நேரம் சும்மா விட்டிருக்குமா? அப்பவே எழுந்திருச்சு அல்லாரையு மொரேயறையா யறைஞ்சிட்டிராதா? இது வேறே என்னமோடா! (போஜனருகிற் சென்று நோக்கி) அடேடேய்! இது யாரோ ஒரு பொம்பிளை தன்னாலெ படுத்திக்கிட்டுருக்கிறாப்போல தோணுதடா!

வீ:—(தைரியங்கொண்டு தூரத்திலிருந்தபடியே) என்னம்மா! நானப்பவே சொல்லலே! அவதாண்டா நம்ப அம்

மாத்தாயி ! உங்களைச் சும்மாக்காட்டிக்கும் பயங்காட்டி தடி னேன் !

விரு:—அம்டா ! எவளோ அசந்து தூங்கிருப்போல்தா ண்டா இருக்குது ! (ஸமீபம் பரிக்கிரமித்தல்)

கு:—அடே ! எனக்குக்கெட்ட கோபம் வரும் ! கிட்டே போகாதே ! அவளை யாரென்னு பாத்துக்கிணே ! எம் பெஞ் சாதிடா ! (கிட்டே சென்று) அடியே ! அடியே ! அடி அம் மாயி !

கால:—அடே மொட்டைப்பசங்களா ! என்னடா வெட் டிவார்த்தை பேசரைங்கோ ! அந்த சோப்பு புடவையை பார்க் கச்சையே தெரியலே! இவ எம் பெஞ்சாதி அவுரூப மாச்சேடா ? அடி அவுரூபம் ! (ஸமீபஞ்சென்று பாடுதல்)

இராகம்-நவரோஸ்-தாளம்-ஆதி.

எழுந்திருடி—நீ
பழந் தருகிறேன்,
விழுந்து கைகூப்பி—மருவுவோம்
மொழிந்து மகமொப்பி !
கேடாத அமுதே !
தொடாத அருமபே !
விடாமலுனை வேண்டி—சொகுசுள
மிடாயி தருவேண்டி !

கு:—(தட்டிக் குதித்து காலபாசனைத் தள்ளிக்கொண்டு முன்வந்து)

பாவாய் ! நானுன்னிடம்
ஆவல் மிகக்கொண்டேன் !
காவாய் நீ இத்தருணம்—பூஜிப்பேன்
பூவாமல யுன் சரணம் !— கெடாத.

வி:—(இருவரையுந் தள்ளிக்கொண்டு)
மஹாதகவானெனைச்

சஹாயமாய்க்கொளில்
விஹாரம் சியடைவை—தருணீ!
மஹாதேவனைப் புகழ்வை!— கெடாத.

விரு:—(இம்மூவரையுந் தூரே தள்ளிவிட்டுத் தான் முன் சென்று)

காடுமுழுதுஞ்சுற்றி
ஓடிவந்தேனிதோ
நாடியுனைப்பெண்ணே!—சுகம்பெறக்
கூடுவோம் நாம் கண்ணே!— கெடாத.

நால்வரும்:—(ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு.)

கெடாத அமுதே!
தொடாத அரும்பே!
விடாம லுனைவேண்டி-கொகுசுளா
,, பலேபலே
,, ருசியுள்ள
,, நல்லநல்ல
மிடாயி தருவேண்டி!

சூர: -(எல்லாரையுந் தள்ளிவிட்டு) அடே! நீங்கள் கிட்டவந்தீர்களோ காலை ஒடிச்சிடுவேன். (ஸாிபரந்சென்று போஜனைத்தட்டி எழுப்புதல்.)

வீர:—அடே! உனக்கு மூஞ்சியிலே மீசை யிருந்தாலென்றேடேசில்லடா! (சூரனைப் போஜன்மீது தள்ளிக்கொண்டு கைகலத்தல்.)

போஜ:—ஐயோ இதென்ன? (பயந்து கண்களை விழித்துக்கொண்டு ஆச்சரியமாய்) யார் நம்மை இங்கே இத்தருணத்தில் தட்டி எழுப்பக்கூடும்? ஒருவேளை நம் சிற்றப்பனுடைய வேலையாட்களோ? (சுற்றி நோக்கி) ஆ கோ! இவர் யாவரோ நம் நாட்டைச் சேர்ந்தவர் அல்லர்! இவர்கள் உடையைப்பார்த்தாலே பயங்கரமாயிருக்கின்றது. இக்காட்டில் இவ்

வேளையில் இவர்கள் இங்கு வந்ததென்ஹே? (பிரகாசமாய்) ஐயா! யார் நீங்கள்? எங்கிருந்து வருகின்றீர்கள்? ஏனிப்படி மேலே விழுகின்றீர்கள்?

சூர:—ஏண்டி! இதுக்குள்ளேயே மறந்துட்டையோ? (போஜன் தோள்மீது கைபோடல்.)

போஜ:—(சூரன்கையை விசிறித் தள்ளிவிட்டு) என்ன குடித்தவன்போல் மேலேவிழுகின்றாய்! தூரத்தில் நில்லடா!

வீர:—ஆம்! போருமாடா மொட்டைப்பயலே! பார்த்துக்கிட்டையா? எம் பெஞ்சாதி அம்மத்தாயி என்னுட்டு நான் அப்பவே சொல்லலே? (போஜனைக்கட்டியணைதல்).

போஜ:—(வீரனையும் விசிறித்தள்ளிவிட்டு எழுந்துநின்று) யாரடா முழுமக்கள்காள்? உங்களுக்கு மூளையிருக்கின்றதா யில்லையா? ஸ்திரீ புருஷனென்பதுகூடத் தெரியவில்லை போலும்? சீ! குடிகாரப்பயல்களே! விலகி நில்லுங்கள்! (இவ்விருவரையும் ஒவ்வோருமுறை கொடுத்து பிடித்தீட்டல்).

கால:—ஆமாண்டா! குரலைப்பார்த்தால் புருஷன்போல தாண்டா யிருக்குது?

வீர:—ஆம்! எவனோ கொழுத்த ஆசாமிதான்! இவனைப் பிடிச்சாக்கே என்னமானு கெடைக்கும்.

கால:—அடே! அப்படியானு, நீ மெள்ளப்போய் பிடிச்சுக் கோடா! நானுக்கூடவரேன்.

போஜ:—(ஆத்மகதமாய்) இவர்கள் கிராதர்கள் போலிருக்கின்றனர்! எதாயினும் கொள்ளையடிப்பதற்கு வந்திருக்கலாம். இவர்களிடத்திலிருந்து மெதுவாய்த் தப்பித்துக்கொண்டு செல்வதே நலம்! (எந்தப்பக்கமாப் போகலாமென்று பார்த்தல்)

கால:—(போஜனை மடக்கிக்கொண்டு) அப்பேன்! எங்கே போவலாமென்னு பாக்கரே? நம்மையுமந்த சொத்தப் பசங்களென்னு நினைச்சுட்டையோ?

**போஜ:**—அப்பா, நீ பெரிய மநுஷ்யந்தான்! உனக்கொரு நமஸ்காரம்! யான் அவஸரமாய்ப் போகவேண்டியிருக்கிறது. மறிக்காமல் வழியைவிட்டுச் செல்! (ஒரு புறமாய்ப்போகப் பார்த்தல்)

**கால:**—நானுந்தானப்பேன் அவசரமாகப் போகவேண்டும்! சத்தே பொறுத்துக்கொள்! (மார்பில் கைகொடுத்துக் கட்டுதல்.)

**போஜ:**—(அவனைத்தள்ளி கீழே நீட்டிவிட்டு) யான் யாரென்று நினைத்தாயடா? இனியாகிலும் புத்தியுடன நடந்துகொள்! (திரும்பிப்போகும்பொழுது காலபாசன் போஜனது இடதுகாலைக் கட்டியாய்ப்பிடித்துக் கொள்ளல்).

**விரு:**—(பின்னேவந்து மடக்கிக்கொண்டு) அடே திருட்டுப்பயலே! இவ்விருளில் எங்கேடா போறே? நில்லடா நில்லு! போனயோ சிண்டியைக் கிழித்துவிடுவேன்! (போஜனுடைய இரண்டு கைகளையும் சேர்த்துக் கட்டுதல்.)

**போஜ:**—(காலையுதறி வாங்கிக்கொண்டு பின்பக்கமாய்த் திரும்பி) அடே பேசாமல் இப்பொழுதே என்னை விட்டுவிட்டோடு! வீணாய் மடிவாய்! (ஒரு கையை வாங்கிக்கொண்டு)

கள்ளருந்தின கோலமோ விது
காட்டிலென்னை மடக்கிறாய்?
கள்ளன்போலுமே பின்னர்வந்துநீ
காட்டிவல்லமை துள்ளிறாய்!

**விரு:**—(போஜனது வலதுகையைக் கட்டியாய்ப்பிடித்துக் கொண்டு.)

தொல்லையா மெமதெல்லைவந்து நீ
தூர மேகுவதெங்கடா?

**ஜய:**—நல்லது! உனக்கிஷ்டமில்லாதிருப்பதனால் இப்பழங்களையாயினு மருந்து! (இன்னுமிரண்டு பழங்களை எடுத்துக் கொடுத்தல்)

**போஜ:**—(பழங்களை வாங்கிக்கொண்டு) தங்கள் அன்புக்கு யான் என்ன பிரதி செய்யப்போகின்றேன் ?

**ஜய:**—அப்பா! யானின்னானென் றுனக்குத் தெரிந்ததோ! என்னைத் தான் இப்பில்லர்களுக்கெல்லா மரசனென்று சொல்லுவார்கள்.

**போஜ:**—ஐயா! யான் முன்னமே தெரிந்துகொண்டேன்.

**ஜய:**—எங்களுடைய தொழிலுனக்குத் தெரியுமோ? பிறர் பொருளைக்கொள்ளை யடிப்பது தான்! (காவதனை வெள்ளிக்கலசத்தை ஐயபாலனிடம் நீட்ட, வாங்கியருந்துதல்)

**போஜ:**—(ஆத்மகதமாய்) ஆஹா! மிகவும் பரிசுத்தமான தொழிலே! (பிரகாசமாய்) யான் அப்பொழுதே அறிந்து கொண்டேன்.

**ஜய:** (மதுவின் ருசியை அபிநயித்துக்கொண்டு) ஆஆ! இதனுடைய ருசியை யானென்ன சொல்லப்போறேன்! நீ கொடுத்து வைக்கவில்லை! அது போகட்டும்! நானொன்றுசொல்லுகின்றேன்! நீ யப்படி நடப்பாயாகில் உயிருள்ளளவும் உனக்கு யாதொரு கஷ்டமும் நேரிடாது.

**போஜ:**—ஆஆ! அப்படியே செய்யக் காத்துக்கொண்டிருக்கின்றேன்! சொல்லுங்கள் தங்கள் மநத்திலிருப்பதை!

**ஜய:**—அப்பா! உன்னையே இப் பில்லர்களுக் கெல்லாம் பிரதாநியாய் நியமிக்க விரும்புகின்றேன். உனக்கு ஸம்மதமா?

**போஜ:**—(ஆத்மகதமாய்) அ! இஃதென்ன விபரீதம்! இத்தொழிலுக்கும் நாம் உட்படவேண்டுமோ? இச்சமயம் நாம் இவன் சொல்லுகிறபடி ஸம்மதிக்காவிடில் யாது நேரிடுமோ?

இதற்கென்செய்வோம்? (யோசித்து) சரி! இப் பில்லர்களுடைய திருட்டுவழிகளை யறிவதும் க்ஷத்திரியர்களுக்குரியதன்மையோ! (பிரகாசமாய்) அப்படியே! தங்களிஷ்டப்படி!

ஜய:—அப்பா! மிகவும் ஸந்தோஷம்! நீ இதுமுதலெனக்குச் சிறந்த மித்திரனாகி விட்டனை! உன்பெயர் என்ன? நீ வசிக்கும் நாடு யாது?

போஜ:—(ஆத்மகதமாய்) இவனுக்கென்ன விடைகூறுவது? எப்படி நமது வாஸ்தவப் பெயரை யுரைப்பது? நல்லது இவ்வாறுரைப்போம். (பிரகாசமாய்) ஐயா! என்னை ஸைந்தலன் என்பார்கள்! யானிருப்பது மாளவநாடு!

ஜய:—ஆஹா! உன் பெயரைக் கேட்கும்பொழுது ஸ்ரீ ஸிந்துல மஹாராஜருடைய ஞாபகம் வருகின்றது. உன் வீரத்தன்மைக்குச் சரியான பெயரே! இதோ இந்தக்கட்கத்தைப்பரிசாகப் பெற்றுக்கொள்! இது முன்னொருகாலத்தில் மஹாவீரனாயிருந்த ஒருராஜனுடைய கரத்தை யலங்கரித்தது.

போஜ:—(வணங்கி) எல்லாம் தங்களநுக்கிரஹம்! (வாங்கிக்கொள்ளல்)

ஜய:—நண்ப! இப்பொழுது வெளிச்ச முனக்கின்கு நன்றாய்த் தெரிகின்றதா?

போஜ:—அவ்வளவு நன்றாகத் தெரியவில்லை.

ஜய:—(ஒருவிதமைய்யைப் போஜன் கண்ணிலிட்டு) நல்லது! இப்பொழுது பார்! என்னவாயிருக்கின்றது?

போஜ:—(ஆச்சரியங் கொண்டு) ஆ ஆ! இதென்ன? பகல் போற் பிரகாசமாயிருக்கின்றதே!

ஜய:—நண்ப! நீ என்னுடைய பிரதானியாகி விட்டபடியால் உனக்கினி யாதொரு துன்பமும் நேரிடாது. நாங்கள் இன்றையதினம் தாராநகரத்து இராஜகுமாரனுடைய அரண்மனையைக் கொள்ளையடிப்பதாகப் புறப்பட்டோம். அவ்விராஜ

குமாரனை அவனது சிற்றப்பன் கொன்றுவிட்டதாக நமது தூதர்கள் மூலமாய் இன்று கேள்விப்பட்டோம். இப்பொழுது அவ்விடம் செல்லுவதற்காகவே நாங்கள் இவ்விடத்தில் ஒன்று கூடினோம். நீயும் எங்களுடன் வரும் பக்ஷத்தில் வேண்டிய ரத்தினங்களையும், ஆபரணங்களையுங், கொண்டுவரலாம். நாங்கள் அற்பமான பொன் வெள்ளி முதலானவற்றுக்கு ஆசைபடுகிறவர்களல்ல. அற்பர்கள் வீட்டைக் கண்ணெடுத்தும் பாரோம்! அரசர்கள் அரண்மனையையே தேடிப் புகுவோம்! இரத்திநாபரணங்களையே தோடுவோம்! இதுவரை என் ஸ்நேஹிதனாகிய அச்சிந்தல மஹாராஜரது புதல்வனுக் கஞ்சி அப்பட்டணத்திற் பிரவேசித்ததில்லை. அவனது சிற்றப்பன் அவ்வாபரணங்களைக் கைப்பற்றுவதற்கு முன்னரே நாமங்குச் செல்லவேண்டும். ஆகலின் சீக்கிரம்செல்லுவோம் வருகிறையா? (போஜனது நெற்றியில் ஒருபொட்டிட்டு) இப் பொட்டின் மஹிமையால் நீ யொருவர் கண்ணுக்கும் புலப்படாமலே எவ்விடத்திலும் ஸஞ்சரிக்கலாம்.

போஜ:—(ஆத்மகதமாய்) ஆஹா! என்ன காலம்! நம்மைக் கொண்டே நம்மரண்மனையைக் கொள்ளையடிக்கப் பார்க்கின்றனரே! என்ன செய்வோம்? இதற்கு எவ்விதம் நாமுடன்படுவது? (சற்று ஆலோசித்து) காலம் இப்படி நேரிட்டுவிட்டது. இனி நாம் பின் வாங்குவது சரியன்று. எதற்கும் நம்மரண்மனையைத்தானே கொள்ளை யடிக்கப்போகின்றனர்கள்! இதனால் இதரருக்கு நாமொரு தீங்கு மிழைக்கப்போகிறதில்லை. இது நமக்குத் தெரிந்துநடந்தாற் பின்னொரு ஸமயத்தில்நமக்கே பயன்படும். இவர்களுடைய இரஹஸ்ய வியாபாரங்களையு மறியலாம். (பிரகாசமாய்) ஆஹா! அப்படியே வருகின்றேன்.

ஜய:—அப்படியாயின், சீக்கிரம் போவோம் வாருங்கள்! (ஆத்மகதமாய்) இன்று நமக்கு வேண்டிய திரவியம் கிடைக்கு

மென்பதில் ஸந்தேஹமில்லை. இதற்கத்தாட்சியாகவே கடவுள் நமக்கு இம்மஹாவீரனைக் கூட்டிவைத்தார்.

(யாவரும் நிஷ்கிரமித்தல்).

---

## இரண்டாங் களம்.

---

இடம்:— விலாஸவதியினரண்மனையில்
ஒரு சோகாகாரம்.

(ஏகவேணி தரையாய்த் தலைவிரித்து கைவைத்து வ்யஸநப்பட்டுக்கொண்டே தன்னந் தனியாய்வீற்றிருந்தபடி **விலாஸவதி** பிரவேசித்தல்.)

விலாஸவதி:—(மெலிந்த குரலுடன்) ஹா! பிராணநாத! உம்மைக்கொன்றும் பாவியேன் ஜீவித்திருக்கின்றேனே! உலகத்தில் வனிதையருள் தன் புருஷனையே மருந்து கொடுத்துக் கொல்வாருண்டோ? ஐயோ என் அன்பர் சுலம் பெறுவாரென்று நம்பியன்றோ அம்மருந்தையான் அப்பாலிற் கலந்துவைத்தேன்! அதே எனக்குப் பிரதிகூலமாய் முடிந்ததே! இனி என்னிலும்மஹாபாதகி இவ்வுலகில் ஜனிக்கப்போகின்றனளோ!

**இராகம் - பியாகடை - தாளம் - ரூபகம்.**

**பல்லவி.**

ஈசா! யான் என்செய்வேன்?-எவண் ஸஹிப்பேனிதை
மோசம்போனேனையோ!

**அநுபல்லவி.**

ஆசையுடன் வந்த-ஆருயிர் நேசரை
நேச மில்லாப்படி-நீலியான் கொன்றேனே!— ஈ.

**சரணங்கள்.**

ஏக போகமாக-என் பிராணநாதரின்
தேஹஸுகத்தையான்-தேடி யிக் கொடுமையை
மோஹத்தாற் புரிந்தவிம்-மூடையி னுயி ரின்னும்
போக வில்லையே யந்தோ-பொல்லா வுடலைவிட்டு!— ஏ

மோசக்காரி இவள்-முகம் பார்க்கலாகாதென்று
ஓசைசெய்யாமலே-ஓடியிறந்தாரோ ?
காசினி யிலிவள் போற்-கடினை வேறில்லை யென்று
கூசி மனம் நொந்து-குத்திக் கொண் டிறந்தாரோ?— ஏ

ஹா பிராணநாத ! இப்பொழுதுதான் மலர்ந்து வருகிற செந்தாமரை யிதழ்போல் அகன்று நீண்டு கடைப்புறம் சிவந்து கருவிழிபொருந்தி கருணாரஸம் பொழிகின்ற நுமது திருக்கண்களினழகையும், மத்தகஜத்தைஹரித்துப் பர்வதாக்ரத்திலுலாவும் ஆண் ஸிம்ஹம்போல் நடக்கிற நுமது கம்பீரமான நடையினழகையும், சந்திரிகை போர்குளிர்ந்ததும் அமிருதம்போல் மதுரமானதுமான நுமது பிரியவசனங்களின் ஆநந்தத்தையும், புண்ணியசீலரான எந்த விண்ணுலகத்து மாதர்கள் பார்த்துக் கேட்டு மாநந்திக்கப் போகின்றனரோ ? ஹா ! பிராணேச்வர ! என்னுடைய தௌர்ப்பாக்கிய வசத்தினால், யானே உம்மைக் கொன்று, காற்றினலடிப்பட்டுக்கடலில் வீழ்கிற நாவாய்போல் இதோ துக்கஸாகரத்தில் மூழ்கிநசிக்கின்றேன்! ஹா! பிராணநாயகா! மூடையான யான் செய்த பிழைகளாலேயே லோகோத்தமமான ஸௌந்தரியமுள்ள நும்மைக் காணாமல், அலைகளால் மோதப்பட்டுக் கரைந்து க்ஷீணிக்கிற நக்ஷத்திரம்போல் வ்யஸநத்திற் கரைந்தழுகின்றேன் !

(பிரவேசித்து)

**தரங்கவதி:**—(ஆத்மகதமாய்) இன்றாயினும்நம்மைக்காண விடைதருவளோ? இத்தனைநாளாய் என்னுடன் பிரியமாய்ப் பேசிக்கொண்டிருந்தவள் என்னைப் பார்க்கக்கூடமாட்டே

னென்பதற்குக் காரணம் யாது ? (செவிகொடுத்து) ஏதோ மெலிந்தகுரல் ஒன்று கேட்கின்றது! (நோக்கி) அந்தோ! நம் விலாஸவதிதேவியாரின் குரலே! தெய்வாதீனம்! கதவுதிறந்திருக்கின்றது! நல்லது! ஒருபுறமாய் மறைந்து நின்று இவள் சொல்லிக் கொள்வதைக்கவனித்துக் கேட்போம். (அப்படியே மறைந்து நிற்றல்).

**விலா:**—ஹா! கஷ்டம்! கஷ்டம்!! அநந்த கல்யாணகுணங்களால் அலங்கிருதரான அந்த ராஜீவாக்ஷரைப் பறிகொடுத்து இனி எப்படி யான் ஜீவிப்பேன்! ஆலாஹலவிஷத்தையுண்ட வொருவன் ஜீவதாரணஞ்செய்வதரிதுபோல் இப்பர்த்திரு சோகமாகிற விஷத்தையுங் கொண்ட யான் இனி ஜீவிப்பதும் துர்லபமே! யான் மஹா கொடிய பாதகஞ் செய்தவள்! யானிப்படியே நசிக்கவேண்டியவள் தான்! ஐயோ! என் செய்வேன்? தாகத்தால் தபிக்கின்றேன்! ஆசையாலழிகின்றேன்! பர்த்திரு சோகத்தால் வாடுகின்றேன்! ஹே ஈசா! இப்பாவி ஈடேறுவதற்கு ஒருவழியுமில்லையோ?

*"நல்லெழுபா, ஹா! ஒரு காலத்தி லேதுநாம், என்
கண்ணொத்த புருஷனிடமோ!
கருணைக் கிணங்காத வன்மையாய் நான்புருஷன்
தற்றிக்க வொருகாலுமோ ?
வல்லான் வகுத்ததே வாய்க்கா லென்னுமொரு
வழக்குக் கிழுக்குமுண்டோ ?
வானமாய் நின்றின்ப மழைபொழிந்தியெனை
வாழ்விப்ப தென்பாங் காண்!
பொல்லாத சேயெனில் தாய்தள்ளி னீந்தியோ ?
புகலிடம் பிறிதுமுண்டோ ?

* நாதநாமக்ரியை.

பொய்வார்த்தை சொல்லிலோதிருவருட்கயலுமாய்ப்
புன்மையே ஞவனந்தோ !
சொல்லான் முழக்கிலோ ஸுகமில்லை மௌனியாய்ச்
சும்மா விருக்கவருளாய்
சுத்தநிர்குணமான பரதெய்வமே பரஞ்
ஜோதியே ஸுகவாரியே!" (கஉ)

(களைத்து அறையில் ஒருபுறத்தில் மூர்ச்சித்து வீழ்தல்)

**தரங்கவதி** :—(ஆத்மகதமாய்) ஆஆ ! என்ன மோசம் ! என்ன மோசம் ! அந்தோ ! இம்மாது சிரோமணி ஒருகபடமு மறியாது அப்பாதகன் முஞ்ஜராஜனது வார்த்தைகளை நம்பி, இராஜகுமாரர் இறந்துவிட்டதாக நினைத்து துக்கஸாகர தில் மூழ்கி, பசிதாஹத்தைக்கூட கவனியாமல், இம்மூன்று நாளாய் இவ்வறைக்குள்ளேயே தன்னைத்தனியாய் அடக்கஞ் செய்துகொண்டு, ஒருவர் முகத்தையும் பாரேனென்று பிடி வாதங்கொண்டு கரைந்துருகுகின்றாளே !

**இராகம்-பிஹாக். தாளம்-ஏகதாளம்.**

**பல்லவி.**

மாதுசிரோமணி – மலிகின்றாளோ !
நாதனை நினைந்து – நலிகின்றாளோ !

**அநுபல்லவி.**

வானதினீங்கிய - வநிதைபோலிவள்
தீனையாயிங்கே - தியங்குகின்றாளே !— மா.

**சரணங்கள்.**

ராஹுபீடித-ராகா சந்த்ரிகைபோல்
மோஹங்கொண்டிவள்-மூர்ச்சித்தாளோ?— மா.

பனியில்வதங்கும்-பங்கஜப்பொய்கைபோல்
தனியாயிங்கிவள் – தவிக்கின்றாளோ?— மா.

(நோக்கி) ஐயோ! இஃதென்ன ஸங்கடம்? இதுவரைக்கும் பேசிக்கொண்டிருந்தவள் ஏனோகீழே வீழ்ந்திருக்கின்றனள்? (செவிகொடுத்து) அந்தோ மூச்சுக்குரல்கூடக் கேட்கவில்லையே! இவள் மூர்ச்சித்தே விழுந்திருக்கிறாளென்பதில் ஸந்தேஹமில்லை. நல்லது! இதனையே வியாஜமாக வைத்துக்கொண்டு இவளருகிற் செல்வோம். (அப்படியே சென்று பிரகாசமாய்) அம்மணீ! எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்! ஏனிப்படிக் காரணமின்றி வ்யஸநப்படுகின்றீர்கள்?

விலா:—(கண்விழித்து நோக்கி) ஹா! தரங்கவதியா? நீ ஏன் இங்கு வந்தனை? என்னைத் தனியாய் விட்டுவிட்டுச்செல்!

தரங்க:—அம்மணீ! தங்கள் மநத்திலிருக்கும் வ்யஸநத்தை என்னுடன் உரைக்கலாகாதா? தங்கள் மாமியார் சசிப்பிரபா தேவியார் தங்களைக் காணவேண்டுமென்று பன்முறை சொல்லியனுப்பியும் தாங்கள் பாரேனென்று சொல்லுவதழகோ?

விலா:—(எழுந்துட்கார்ந்து, தைர்யத்துடன்) ஸகீ தரங்கவதீ! நீ யொன்றுமறியாய்! யான் புரிந்த செயலை நினைக்க நினைக்க என் மநம் புண்ணாய்ப் பற்றி எரிகின்றது!

இராகம் - பிஹாக் : தாளம் - ஏகதாளம்.

பல்லவி.

ஓ ஸகி! யான் யாது செய்வேன்?
மோசம் போயினேன்!

அநுபல்லவி.

ஆசையினா லறிவிழந்தே
அழியலாயினேன்!— ஓ ஸகி.

சரணங்கள்.

காதலனைப்பறிகொடுத்தங்-கல்லுப்போலயான்
பூதலத்திற் பாரமாகிப் - புலம்பலாயினேன்!— ஓ ஸகி.

இன்னவிதமென்கொழுநர் - இறந்தனரென்று
அன்னைகேட்கிலென்படுவாள்-என்னசொல்லாளோ!—ஓ ஐயோ! புத்திரனினும் பத்துமடங்கு அதிகமாயென்னைப் பிரேமையுடன் பார்த்துவந்த என் மாமியார் இச்செய்தியை யறிந்தால் என்ன நினைப்பள்? அந்தோ! யான்யாவருக்குந் துரோஹியானேனே! இந்தக்துக்கத்திற்கு இனி விமோசநமேது?

நரங்க:—என்ன! என்ன! தாங்கள் சொல்வதெல்லாம் விந்தையாயிருக்கின்றது! தேவியார் இனித் தங்களைக்காணுமல் ஒருகணமாயினு முயிர்த்திரார்கள். வாருங்கள், தேவியார் அரண்மனைக்குச் செல்வோம்.

விலா:—ஸகி! நீ ஏன் என்னை வருத்துகின்றாய்? நான் இவ்வறையிலேயே உபவாஸமிருந்து என்னுயிரைத்துறக்க நிச்சயங்கொண்டேன்! நீ பேசாமற் செல்லுவாய் (நரங்கவதி முஞ்ஜன் வருவதைக்கண்டு கொஞ்சதூரஞ்சென்று மறைந்து நிற்றல்).

(பிரவேசித்து)

முஞ்ஜன்:—(காமாதுரனாய் விலாஸவதியைக்கண்டு ஆத்மகதமாய்) ஆ ஆ! பர்த்ரு சோகத்தினால், வெள்ளம் வந்து வற்றிப்போன நதிபோலும், நீரினின்றும் பிடுங்கி யெறியப்பட்ட தாமரைக் கொடிபோலும், களிற்றினின்றும் பிரிக்கப்பட்ட பிடிபோலும், இளைத்துக் கறுத்து வாடி மலிந்திருந்த போதிலும், இவளுடைய அழகை யான் என் சொல்வேன்!

*"அன்னம் பழித்தநடை யாலம் பழித்தவிழி
யமுதம் பழித்த மொழிகள்
பொன்னம் பெருத்தமுலை கன்னங் கறுத்தகுழல்
சின்னஞ் சிறுத்தவிடையும்

---

விவேகசிந்தாமணி.

என்னெஞ் சுருக்குமிவள் தன்னெஞ்சு கற்றகலை
யென்னென் றுரைப்பதினிநான்?
சின்னஞ் சிறுக்கியிவள் வில்லங்க மிட்டபடி
தெய்வங்க ளுக்கபயமே!"

ஆஆ! இவளுடைய அபூர்வமான ஸௌந்தரியத்தைக்கண்டு இவளை ஸ்ருஷ்டித்த ப்ரும்மதேவனே மோஹிப்பர்! அப்படியிருக்க வேறெந்தப் புருஷன் தான் யௌவனபரிக்குவத்தால் அதிமநோஹரமாய் விளங்கும் இவளுடைய அழகுக்குட்பட்டு மயங்கான்?

*"வண்டுபொய்த் தனைய கூந்தல்,
பதநப்பண் டார வல்லி,
கெண்டையோ டொத்த கண்ணாள்,
கிளிமொழி வாயி னூறல்,
கண்டிரர்க் கரையோ டேனே
கனியொடு கலந்த பாலோ,
அண்டருங் கண்டா லிந்த
வணங்கினை வணங்கு வாரே!"

ஆகலின், இவளுடன் ஒரு நாளாயினுங்கூடி வாழாததேஹம் எதற்கு? யான் இவளுடைய ஸுந்தரமான வடிவைக்கண்டு பால்லியம் முதல் இவளை யெப்படியாயினும் மணம்புரியவேண்டு மென்று நினைத்திருந்ததனுல், எனது காரியத்தைச் சாதிப்பதற்காகவே இவளைப் போஜனுக்கு மணஞ்செய்வித்தேன்! இப்பொழுது நமது சூழ்ச்சியாற் போஜனும் ஸுலபமாகவே தொலைந்துவிட்டனன். இவ்விராஜ்ஜியமும் அகண்டகமாய் நம் கைவசமாய்விட்டது. இவளையுமெப்படியாயினும் மணஞ்செய்

* விவேகசிந்தாமணி.

துகொண்டால், நமது இஷ்டத்தைப்பரிபூர்த்திசெய்வதுமன்றி மஹாராஷ்ட்ரமாகிய பூபாள நாட்டிற்கும் நாம் அரசனாய்விடலாம். (சிறிதுதூரம் பரிக்கிரிமித்து) ஆயினும் இவளுடையமநத்தை எப்படித் திருப்புவது! எதற்கும் நம்மாலான முயற்சிகளைச் செய்துபார்ப்போம். இவ்விராஜ்ஜியங் கிடைத்ததுபோலவே, இவளுங் கிடைக்கட்டுமே! நல்லது இதுவே தருணம்! இந்த ஸமாசாரம் இன்னும் போஜனது தாய்க்குத் தெரிந்திராதென்றே நம்புகிறேன்! தெரிந்திருப்பின் அப்பொழுதே, இவ்வரீயாயத்தை நம்மிடத்தில் முறையிட்டிருப்பள்! நல்லவேளையாய் நமதுஸஹோதரி சாருமதியும் பூபாளநாட்டிற்குச் சென்றனள்! அவளுக்கும் போஜன் இறந்துபோன ஸமாசாரம் தெரிவதற்கு முன்னரே இவளை நம்மிடத்தில் மோஹிக்கச்செய்து, எப்படியாயினும் மணந்துகொள்ளவேண்டும். பிறகு இவ்விரண்டு செய்கைகளைக் கேட்டாலே இவ்விருவர்களும் மநம் வெடித்து இறப்பாகள்! இதுதான் அப்பிரதிபந்தங்கள் இரண்டனையும் ரேஅடியாய் தொலைப்பதற்குச் சரியான உபாயம்.(விலாஸவதியினருகிற்சென்று பிரகாசமாய்) என் கண்மணீ! எழுந்திரு! எழுந்திரு! ஆ! நீ இந்த ஸ்திதியிலிருப்பதற்காகவோ நான் பட்ட கஷ்டமெல்லாம்?

விலா:—ஆ! தெய்வமே! (தைந்யங்கொள்ளல்.)

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) அந்தோ! இவள் இவ்வாறு துயரப்படுவதைக்கண்டு என் மநமுங் கலங்குகின்றதே! இவளெப்படி ஆறுதலடைவள்? ஆயினும்இவளுடைய அழகையான் என் சொல்வேன்?

இராகம்-கல்லியாணி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

பாக்கியமே பாக்கியம் - இம்மங்கையைப்
பார்ப்பதுவே ஸிலாக்கியம்!

பாக்கியமே பாக்கியம் - பாரினுள்ளிவள் சிலாக்கியம்
பால்வடியுமிவள் - பாலிகையே போக்கியம் !— பா.

**சரணம்.**

இஹ பர மிரண்டிற்கும் - எனக் கிவளே யோக்கியம்
என்றுமென்மநத்தினின் - விலகா திவள் வாக்கியம் !
ஜகந்தனி லிவளுடன் - ஸுகிப்பதுவே சிலாக்கியம்
தரித்திரத்தசையிலு-மிவளே பெரும்பாக்கியம்!— பா.

எப்படியிருப்பினு மிவளை மணந்து கொள்வதேசரி! (பிரகாசமாய்) ஆ! விலாஸவதி! நீ இப்படித் துயரப்படுவதுஞ் சரியோ? உன்னைக்கண்டு நின்பெரியோர்கள் படும் துயரத்தையாயினும் நீ யோசிக்கவேண்டாமா ?

**விலா:**—ஆம்! என்பெரியோர்கள் என்னைக்கண்டு துக்கிக்காமல் என்செய்வார்கள் ? என் அருமை மாமியார் இம்மூன்று நாளாய்க் கொடிய துயரத்தினால் வருந்தி என் முகத்தைக் கண்டாவது தனது சோகத்தைக் கொஞ்சம் போக்கிக் கொள்வதாய்ச் சொல்லியனுப்புகிறார்கள் ! ஆயினும் யான் இவ்விதக் கொடுஞ்செயலைப் புரிந்துவிட்டு என் மாமிமார்களை எப்படிக்காண்பது ? மாமா ! யானின்னும் இக்கொடிய உயிரை வைத்திருக்கின்றேனே ! என்னையும் அவருடன் அக்கினியில் ஸம்ஸ்காரஞ் செய்து விட்டிருக்கலாகாதா ?

**முஞ்ஜ:**—என் கண்மணி ! இது நீ செய்த பிழையன்று ! நீ செய்ததெல்லாம் அவனுடைய நன்மைக்காகவே தான் ! விதியின் செயல் அவன் அப்படி இறக்கவேண்டியிருந்தது ! நீ இதையறிந்தும் இப்படி அந்தபாநமில்லாமல் வருந்துவது தகுதியன்று !

**விலா:**—மாமா ! பதியைக் கொன்றுவிட்டும் யான் இன்னும் ஜீவித்திருக்கவும் வேண்டுமோ ?

**முஞ்ஜ:**—(ஆத்மகதமாய்) அந்தோ! இவளது துக்கத்திற்குக் கங்குகரையில்லை போற்றோற்றுகின்றதே! இவளுடைய

மநத்தை யான்எப்படித்திருப்புவது?எனஜெண்ணம் ஸாபலமா ய் சிறைவேறுமா? (விலாஸவதியை நோக்கி) ஆஜு! இவளுடைய ஸர்வஜகந்மோஹநமான வடிவினழகைக்கண்டும் யான் சும் மா விருப்பேனோ? எப்படியாயினும் இவளை மணந்துகொள்வ தே சரி! (பிரகாசமாய்) ஹா! விலாஸவதி! நீ இவ்வாறு வ்யஸந ப்படுவதனுலெனக்கொன்றுந் தோன்றவில்லையே! இதற்காக வோ யான் உன்னை இவ்வளவு அருமையாய் வளர்த்தேன்!

ஐயையோ வென்ன செய்வேன்?
அகத்திலும் நினைத்தே னல்லேன்
வெய்யவன் குலத்து தித்தோன்
வீழ்வனென் றெக்கா லத்தும்!
தையலே யுனக்கு வேண்டாம்
தரணியன் ஸுதனை நீயும்
மையலை மறந்து வேறு
யுவனைக் கொள்ளு வாயே!

**விலா:**—என்னை அருமையாய் வளர்த்த மாமா! தங்க ளுக்கேனிந்த வீண்சபலம்! இனி வ்யர்த்தமன்றோ என் னுடைய வாழ்க்கையெல்லாம்! அப்படியிருக்க, இப்பாவியே னைப்பற்றித் தங்களுக்கேன் இவ்வீண்கவலை! இனி மரிப்பதொ ன்றே எனக்கு ஸுகந் தரும்!

**முஞ்ஜ:**—பேதாய்! இதென்ன இவ்வாறெல்லாம் சிந்தித் துக்கொண்டிருக்கின்றனை? புருஷரை இழந்த ஸ்திரீகளெல் லாம் பதியுடன் கூடவே இறந்துவிடுவார்களா? வைதவ் யத்தையடைந்தும் எத்தனை வநிதைகள் ஸுகமாய் வாழ்ந்திருக் கவில்லை! போனதைப் பற்றிச்சிந்திப்பதிற் பயனென்னை? இனி நடக்கவேண்டியதைப்பற்றி யோசிப்பாய்!

"ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும்
மாண்டார் வருவாரோ மாநிலத்தில்?"

நான் உயிருடனிருக்கும்வரைக்கும் உனக்கு யாதொரு குறையும் வாராது! வீணாய் இவ்வாறு தேஹத்தைக்கிலேசப்படுத்திக் கொண்டு வருந்துவதிற் பயனென்னே? உத்தமநாயகர்களுடன் ஸுகித்திருந்த ஸ்திரீகள்கூட இப்படி வ்யஸநப்படார்களே. ஆ! அவன் இந்நேரம் உயிருடனிருப்பானாயின், நீ அவ்வேசிக்கு அடிமையாகவல்லவோ போயிருக்கவேண்டும். உன்னுடன் கூடிவாழேனென்று சபதஞ்செய்த அப்பாவி இருந்தென்ன? இறந்தென்ன?

விலா:—(காதிற் கைவைத்து) ஹா! சிவ! சிவ!! இக்கொடிய பேச்சுகளையெல்லாம் கேட்கவோ யான் இன்னும் உயிர்தரித்திருக்கின்றேன்? (வேறொரு பக்கம் திரும்பிக்கொள்ளல்.)

முஞ்ஜ:—விலாஸவதீ! நீ இப்பொழுது ஸகல போகங்களையுமநுபவிக்கத்தக்க தருணியாயிருக்கின்றனை! இவ்வேஷமுனக்குத் தகுதியன்று! என்னால் இரக்ஷிக்கப்பட்டுவருகிற நீ இம்மாதிரி வருந்துவது தகுதியன்று!

விலா:—(ஆத்மகதமாய்) ஹா என்ன கஷ்டம்! என்ன கஷ்டம்! யாவரையுந் துக்கிக்கச்செய்வதற்காகவே இப்பாவியேனாவி வஜ்ஜிரம்போற் கடினமாய் ஸ்ருஷ்டிக்கப்பட்டதோ? ஐயோ! என் மநத்திலிருப்பதை யறியாமல் எனக்கு நன்மையைச் செய்யவேண்டுமெனறல்லவோ எனது மாமன் இவ்வாறெல்லாம் கூறுகின்றனர்! எங்கும் பரவி எரியும் நெருப்பை ஏராளமாய் நெய்யைக் கொட்டி யணைப்பதுபோலல்லவோயிருக்கின்றது எனது நெஞ்சத்திலிருக்குந் துக்கத்தை தணிப்பதற்காக இவர் செய்யுமுபாயம்! இவர் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் எரியும் புண்ணில் ஈட்டியைச் சொருகுவதுபோலிருக்கின்றதே! (பிரகாசமாய்) ஹா! மாமா! இனி இத்தாருண்யத்தினாற் பிரயோஜநம் யாது? அவருடன் எனது தேஹஸௌபாக்கியமும் பாழாய்ப்போய் விட்டதன்றோ?

முஞ்ஜ:—ஹே ஸுந்தரீ! ஏனிப்படி வருந்துகின்றாய்? கடைந்தெடுத்த ஸ்வர்ண பிம்பம்போல் திவ்விய காந்தியோடு

விளங்குகிற உன்னுடைய தநுவினிணையில்லா வெழிலையும் பரிபூர்ணமான யௌவந பாக்கியத்தையும் வீணான பிடிவாதத்தால் நீ யநுபவியாமற் கெடுத்துவிடாதே ! ஸகல ஸாம்ராஜ்ய போகத்தையுந் தரத்தக்கவனாய் யானிருக்கும்பொழுது, நீ இந்நிலையிலிருக்கத் தகுமோ ? லாவண்யஸமூஹமே உருவெடுத்து வந்தாற்போல் விளங்குமோர்யுவதி, திவ்யபரிமளத் தைலந்தடவி மஞ்சள் நீராட்டி, அகிற்புகையூட்டி, ஆபரணங்கள் பூட்டி, அழகாகப் பின்னலிட்டுப் பூச்சூட்டி, கூந்தலை யலங்கரிக்காமல், உச்சிவகிடுமின்றி ஒரேஜடையாயத் தன்னழகிய கேசபாசத்தைப் பாழடையச் செய்வதழகோ ? நவரத்திநமிழைத்த ராஜ ஸிம்மாஸநத்தி லுட்கார்ந்து, புஷ்பாலங்கார சோபிதமான திவ்விய மஞ்சத்திற்படுத்து ஸுகித்திராமல், இவ்விதம் தாபஸிபோல் தரையிற் புரண்டழுவது நேர்த்தியோ ? சிறந்த பொன்னுடையைத் தரியாமல் புழுதியாலுங் கண்ணீராலும் மலிநமடைந்த இவ்வழுக்கு வஸ்திரத்தை யுடுப்பது முறையோ ? திவ்ய ரஸங்களமைந்த அந்நங்களும் பாநங்களும் யதேஷ்டமாகவிருக்கத் திர்த்தாஹாரமின்றி இவ்வறைக்குள் உபவாஸமிருந்துவதங்குவது சரியோ?—

விலா:—அந்தோ ! பதியையிழந்த பாவையர்கட்கு இப்பூஷணங்களாலு மாடைகளாலு முபசாரங்களாலும் என்ன பிரயோஜநம் ? தந்தியில்லாத வீணையும், சக்கிரமில்லாத இரதமும்போலுமன்றோ பதியில்லாத ஸ்திரீகளின் வாழ்க்கை?

தரங்கவதி:—(ஆத்மகதமாய்) ஐயோ ! எல்லாம் அதி கருணமாயிருக்கின்றதே !

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) ஆஹா ! இவளுடைய மநது மஹத்தான துக்கத்தில் ஆழ்ந்திருக்கின்றது! இவளை நன்மொழிகளினாலேயே வசப்படுத்தவேண்டும் ! (பிரகாசமாய்) ஹே திவ்யஸுந்தரீ ! உன் ஸுந்தரவடிவைக்கண்டு யார்தாம் மோஹங்கொள்ளார் ?

கோமகளே! நினதுதிரு வைபவத்தைக்
 கொஞ்சமும் நீ யறிந்திட்டா யல்லை போலும்!
நாமகளு நின்னுவின் சிறப்பைக் காணில்
 நான்முகனின் நல்வாயி லொளிந்து கொள்வள்!
பூமகளு நின்புருவ வனப்பை நோக்கில்
 பூவிடை யிற் றலைவணங்கி மறைந்து நிற்பள்!
பாமகளு நின்பார்வை யழகைப் பார்க்கில்
 பருவதத்தின் குகையிடையே பதுங்கிச்செல்வள்!

அடிபேதாய்! இந்த்ராதி தேவர்களும் உன்னைக்காணில் வியாமோஹங்கொண்டு தத்தம் பத்னிகளைத் தள்ளிவிட்டு உன்னைப்பத்னியாயடைய சித்தமும் சிரஸில் வைத்துப்பூஜிப்பார்களே! அமிருத கலைகளா லகில லோகங்களையும் ஆநந்தப்பிக்கின்ற பூர்ணேந்துவை யொத்த வதநமுடையவோ ஸுமுகி! உனது அங்கஸௌந்தரியம் முற்றும் பார்க்கப் பதினாயிரங்கண்களிருப்பினும் போதா!

விலா:—(சோகாக்கிராந்தையாய்) ஹா! பிராணநாதா! (மூர்ச்சித்து வீழ்தல்).

நரங்க:—(மறைவாய்) ஆஹா! என்னவஞ்சனை! என்ன வஞ்சனை! இராஜகுமாரரைக் கொல்லப்பார்த்தது மன்றி பாதிவ்ரத்யமே வடிவெடுத்து வந்தாற்போலிருக்கும் இப்பேதையையுங் கெடுத்துவிட எண்ணங்கொண்டனனே இப்பாவி! பாவம்! இவள் என் செய்வள்? இவ்வஞ்சகனது வலையிலகப்பட்டுக்கொண்டு இருளாற் பிரதிபாதிக்கப்படுகிற பிரகாசம்போல், இம்மாதுசிரோமணி கருத்து நொந்து களைத்துருகுகின்றாள்! நாம் உடனே தேவியாருக்கிதைத் தெரிவிக்கவேண்டும்! இனி ஒரு க்ஷணமேனுந் தாமதிக்கலாகாது! (நிஷ்க்கிரமித்தல்).

முஞ்ஜ:—(விலாஸவதியைத் தட்டி எழுப்பி) ஆ! என் கண்மணி! எழுந்திரு! எழுந்திரு!

* "ஈண்டு நாளு மிளமையு மீண்டில
மாண்டு மாண்டு பிறிதுறு மாலைய
வேண்டு நாள்வெறி தேவிளிந் தாலினி
யாண்டு வாழ விடருழன் றாழ்தியே!"

ஹே ஸுந்தரீ! ஸர்வலோக மோஹநமான நினது சரீரத்தை இப்பொழுது யௌவந ஸம்பத்து அடுத்திருக்கின்றது! அது நீர்க்குமிழிபோற் ஸ்வற்பகாலவாழ்வுள்ளது! அஃது உன்னை அதிக்கிரமித்துப் போய்விடில், ப்ரவாஹத்தால் தள்ளுண்டுபோன ஜலம்போலும், வெயிலில்வதங்கிப்போன ஜாஜிமலர்போலும் திரும்பிவாராது! ஆகலின் ஸகலஸுகங்களையு மநுபவிப்பதற்கு யோக்கியமான இவ்விளம்பருவத்தை வீணாக்கிவிடாதே! திவ்யாபரணங்களைப்பூணு! திவ்யோபசாரங்களைப்பேணு! எனது அந்தப்புர ஸ்திரீகளுக்கெல்லாம் மேலான பதவியையடைந்து எனக்கிஷ்டமஹிஷியாய், இத்தாரா ராஜ்ஜியத்திற்குப் பட்டமஹிஷியாய் வாழந்திரு!

**விலா:**—(மூர்ச்சைதெளிந்து கண்விழித்தெழுந்து) ஹா! இதென்ன! கனவோ யான் காண்பதும் கேட்பதும்? என்மாமனும் இப்படிச்சொல்லுவரோ? அல்லது நான் புரிந்த துஷ்கிருத்தியமே இவ்வடிவங்கொண்டுவந்து என்னை வருத்துகின்றதோ? ஐயோ! என் செய்வேன்? என்ன கொடிய ஜந்மங்கொண்டேன்! சீ! சுடவேண்டு மிஜ்ஜந்மத்தை! (முகத்தைத்திருப்பிக்கொள்ளல்.)

**முஞ்ஜ:**—ஹே பீரு! எனிப்படிச்சிந்தித்து தீயிலிட்ட வெண்ணெய் ஆகின்றாய்? ரூபத்திலும் பாக்கியத்திலும் உனக்கு அநுரூபனான என்னைப் பர்த்தாவாக வடைந்து ஸகலபோகங்களையு மநுபவிப்பதைப்பார்.

**விலா:**—(ஸம்ப்ரமத்துடன்) என்ன சொன்னீர்கள்? (கோபத்துடன் எழுந்திருத்தல்.)

* கம்பராமாயணம்.

முஞ்ஜ:—ஹேகோமளாங்கீ! இப்படியேன் வீணாய்க்கஷ்டப்படவேண்டும்? இறந்துபோன கணவன் திரும்பியும் வருவனோ? வேண்டாம்! இவ்வீணான சிந்தனைகளெல்லாம் விட்டுவிட்டு, உயர்ந்தஆபரணங்களாலும் ஆடைகளாலும்நின்னழகிய தேஹத்தை யலங்கரித்துக்கொண்டு, நாட்டியஸங்கீதகேளிகள் நிறைந்த இராஜஸபையிற் சத்திரசாமராதியுபசாரங்களுடன் ஸிம்மாஸநத்தின்மீது ராஜராஜேசுவரியாய் வீற்றிருந்து என்னைக்களிக்கச்செய்வாய்!

விலா:—(கோபத்துடன்) போதும்! போதும்! நிறுத்துமிந்த அநுசித பாஷணையை! யாரிடத்தில் இவ்வசநங்களை மொழிவது?

முஞ்ஜ:—ஏ விலாஸவதீ! நீ இம்மாதிரி கோபித்துக்கொள்வது மழகாயிருக்கின்றது! இப்பொழுது தான் உன்னுடைய புருவக்கொடியானது கோபத்தினாற் குடிலமாகி மந்மதனுடைய வெற்றிக்கொடியின் சோபையை யதிக்கிரமிக்கின்றது! திடீரென்று துடிப்பதனால் நினது அதரபிம்பமும் மந்தமாருதத்தினாலசைக்கப்பட்டு மலர்ந்துவரும் பந்தூக புஷ்பம்போல் அதிக காந்தியோடு விளங்குகின்றது!

விலா:—(பெருமூச்செறிந்து அதிக கோபத்துடன்) அடே பாபீ! ஏனிப்படி வீணாய்க்குழறுகின்றாய்? உன்னுடைய ராஜ்ஜியத்தையும் ஸம்பத்தையும் இச்சித்து உனக்குடன்படும் ஸாமாந்ய ஸ்திரீ என்று என்னையுமெண்ணினையோ? உன்னுடைய முக்கியமஹிஷியாயிருந்து உன்னுடைய ஐசுவரியத்தைப்புஜிப்பது எனக்கொருதிருணமடா! மூடா! இந்த விநயத்தாலும் பிரியவசநங்களாலும் என்பாதிவ்ரத்யத்தை உன்னாலசைக்கலாகாது! அடே தூர்த்தா! என்னை ராஜ ஸ்திரீ என்பதையும் உனது மருமகள் என்பதையும் சற்றும் யோசியாமலென்னஅடாதவார்த்தகளையெல்லாம்தொடுத்தனை? வேறொருவராயிருப்பின் உன்னை இக்கணமே கண்டித்திருப்பேன்! என்னையாரென்று நினைத்தனை? நான் அந்தப்

புண்யபுருஷருக்கேயுரியபாதிவ்ரத்யவ்ரதம் பூண்ட தர்மபத்நீ ! பரபுருஷனுன உன்னையடைந்து இன்பமளிக்கத்தக்க ஸ்திரீயல்லேன். சீ! என்முன் னில்லாமல் விரைந்துசெல்! உன்னைக்காண வென்கண் நாணுகின்றது. (எழுந்து வேறொரு பக்கஞ்செல்லல்).

முஞ்ஜ:—அடி! சண்டி! நீ இப்பொழுதுரைக்கும் கர்ண கடோரமான பிரதிமொழிக்கு உன்னை இந்நேரம் சித்திர வதை செய்திருப்பேன். என்னுடைய அந்தஸ்தையும் கௌரவத்தையும் சிறிதேனும் யோசியாமல் வரம்பின்றி மனம் போனவாறெல்லாம் குரூர வசநங்கள் மொழிந்தனை! கேவலம் ஸ்திரீஜாதியான நீ, மஹாராஜாவான வெனக்குச் செய்யும் இவ்வவமானத்தால் மிகுந்த கோபத்தை நான் அடைந்திருக்கின்றேன். நீ என் மநத்திற்கிசையு நிமித்தம் ஸர்வஸ்வத்தையு முனக்கர்ப்பணஞ் செய்வதாக வாய் மொழிதந்தும், என்னையொருபொருட்டாய் எண்ணுமல் திக்காரஞ் செய்கின்றாய்! ஆயினும் உன்மீதெனக்கிருக்கும் காதலானது எனக்குண்டாகும் கொபத்தை யடக்குகின்றது. ஏ முக்தே! ஸகலமநுஷ்யரும் காமத்திற் கீடுபடுகின்றனர்; காமத்திலேயே பரமஸுகத்தை யநுபவிக்கின்றனர். மனிதர்கள் எவ்விடத்திற் காமத்தாற் கட்டுப்படுகின்றனரோ, அவ்விடத்தில் தோஷங்களை விசாரிக்கின்றனர் அல்லர்; அபராதங்களையும் பார்க்கின்றனர் அல்லர்; இது தான் உன் விஷயத்தில் எனக்குண்டாயிருக்கும் க்ஷமைக்குக்காரணம். இராஜாதிராஜன், மஹாப்பிரதாபன் யான் உன்னைக் காமுற்றனன்! நீயோ என்னை அடைய விரும்பாது அறிவிழந்து போஜனையே நினைந்து வியாமோஹங் கொண்டிருக்கின்றாய்! அவ்வற்பப்பயல் கொலையுண்டிறந்ததற்குக் காரணமுனக்குத் தெரியுமா? நீ பாற்சொம்பில் மருந்து கலந்து வைத்தது மாத்திரமன்று. எனக்கு விரோதமாய் எதிர்த்தெழுந்ததே அவன் இறந்ததற்கு முதற் காரணமென்றறிவாய்! உனது ரதியை யிச்சிக்கின்ற வென்

னுடைய பலபௌருஷவிக்கிரமங்களையும் பெருமையுமறியாத வினது கெட்டகாலமாதலால் என்னைத் தூஷித்தனை ! என் முன் உன்னால் என்ன செய்யக்கூடுமென்று நினைக்கின்றாய் ? உன்னைப்பலாத்காரமாய்த் தழுவுவது எனக்கொருவிஷயமா ? மதநலீலையை யறிந்தவனானதனால் உன்னைப் பிரார்த்திக்கலாயினேன். காமுற்ற விடங்களிற் சிற்றங்கொள்ளாமை காமிகளின் குணமாதலின், நீசெய்த இத்தனை யபராதங்களையும்பிரணயலீலை யென்றே பொறுத்து உன்னை க்ஷமிக்கின்றேன் ! சிருங்கார விலாஸ யோக்கியையான மனோரமே ! நீ இப்பொழுதாயினும் தீர்க்காலோசனை செய்து என் மடியிலேறிஸகல ஸுகங்களையு நுபவிப்பாய! அஹோராத்திரமென்னோடு கூடிக்கிரீடிப்பாய் ! ஸமஸ்த ராஜ்ஜியத்தையும் உன் வசப்படுத்திவிடுகின்றேன்! அவற்றைஉன்மனப்படியநுபவி. எனக்குச்சிருங்கார ரஸத்தை மாத்திரங் குறைவரக்கொடு. உன்னுடைய மந்மதலீலையாலெனக்குத் திருப்தியளி. இதுதானென்னுடைய பிரார்த்தனை; மற்ற விஷயங்களிலுன்னுடைய ஆஞ்ஞையே செல்லட்டும் !

(பரபரப்புடன் சசிப்பிரபா தேவியாரும், புத்திஸாகரநும், தரங்கவதியை முன்னிட்டுக்கொண்டு பிரவேசித்தல்)

**புத்திஸாகரர்:**—யான் அப்பொழுதே சொல்லவில்லையா! அப்பாதகன் எதற்கு மஞ்சானே !

**சசிப்பிரபை:**—ஐயா ! யானென்ன மோசம்போனேன் ! அவன் இப்படிப்பட்டவனென்று இதுவரையிலுந் தெரியாமற் போயிற்றே !

**புத்தி:**—ஏதோ ஸம்பாஷணை கேட்கின்றது ! சற்று மறைந்து நின்று கேட்போம். அதனாலேயே தங்களுடைய ஸம்சயம் நிவர்த்தியாகலாம்.

**தரங்கவதி:**—ஆம் ! அம்மணீ ! விலாஸவதிதேவியாரின் குரல் கேட்கின்றது. நாமிப்படி நின்று கேட்போம் வாருங்கள் ! (அப்படியே மூவரும் மறைந்து நின்று கேட்டல்).

விலா :— (பெருமூச்செறிந்து கத்கதஸ்வரத்துடன்) அடே துரோஹீ ! செய்யாத சதிகள் செய்து என்பதியைக் கொன்றதுமல்லாமல் என்னையும் பெண்டாளவாடா நினைத் தனை ? அந்தோ ! யான் என்னமோசம்போனேன் ! என்ன மோசம் போனேன் ! ! அடே க்ஷத்திரியப்பதரே ! கௌரவர் கள் அழிந்துபோவதற்குச் சகுனிவாய்த்ததுபோல், நீ எனக்கு மாமனாக எங்கிருந்து வாய்த்தாயடா ! ஆஹா ! உனது வஞ் சகவார்த்தைகளைக்கேட்டு யான்என்ன வெல்லாம் செய்யலா யினேன் !

'கானலை நீரென் றெண்ணிக்
கடுவெளி திரியு மான்போல்,
வானுறு மிலவு காத்த
மதியிலாக் கிள்ளை பேடுபோல்,
தேனினைக் கண்டு நம்பி
தியங்கிய நகைமை போன்போல்
நானுனை மாம னென்று
நம்பியே நாசமானேன்.'

ஐயோ ! என்னகபடம் ! என்னகபடம் !! தர்மமே உருவெடுத்து வந்தாற்போல், ஒருகுற்றமுமறியாத என் கணவனார்மீது இல் லாதபழிகளையெல்லாம் ஏற்றிச் சொல்லி, பேதையாகிய என் னைக் கொண்டே அவரைக்கொன்றதுமன்றி, என் கற்பிற்குக் கேடுபுரிய வந்தனையே ! ஸ்திரீகளுக்கு ஸகல குணங்களிலும் பாதிவ்ரத்யமன்றோ முக்கியமான ஆபரணமாயிருக்கின்றது ! ஐயோ ! பாதகா ! என்னை இப்படிக்கெடுப்பதற்கோ வெகு அன்புள்ளவன்போற் பாதுகாத்து வந்தனை !

மூஞ்ஜ :—அடிமூடே ! இறந்துவாய் உன் அதிகப் பிரஸங் கத்தை! ஜாக்கிரதை ! நீ செய்யுமிப்பிடிவாதத்திற்கு உன்னைக் கண்டார்நண்டு சிரிக்கும்படி அவமானப்படுத்துவேன். நீ பெண்

ணென்பதையுமெண்ணுமல் உன்னைச் சித்திரவதை செய்வேன்! இப்பொழுதும் உன்னை க்ஷமிக்கின்றேன்; என் மனோரதத் தைப் பூர்த்திசெய்வாய்.

**சசி:**—(மறைவாய்) ஆஹா; கேட்டீர்களோ? என்ன வஞ்சனை! என்ன வஞ்சனை!! பாபம்! இவள்மீது ஒரு குற்றமு மில்லை! எதற்கும் நாம் இனிச்சும்மாவிருப்பது தகுதியன்று!

**புத்தி:**—(மறைவாய்) அம்மணி! சற்றுப்பொறுங்கள்! இன் னுஞ்சிறிது கேட்போம்! (அப்படியே கவனித்துக் கொண்டிரு த்தல்)

**விலா:**—(பயத்துடன் ஆத்மகதமாய்) அந்தோ! யான் என் செய்வேன்? எப்படி இக்கொடியோன் கையினின்றும் தப்பிப்பிழைப்பேன்? ஐயோ! என்ன புத்திஹீனையானேன்! எவ்வளவோ வேண்டின என் மாமியார் அவர்களின்பேச்சைக் கேளாமற் போனேனே! இக்கொலை பாதகனும் பழிபாவத் திற்கஞ்சுவனே? பலாத்காரமாய் எனது கற்பைக்கெடுக்க முயன்றாலும் முயலுவானே! என்செய்வேன்? (சற்றுநேரம் மௌனமாய்க் கபோலத்திற் கரத்தைவைத்து) சரி! இப்படிச் செய்வதுதான் யுக்தம்! வேறுகதி என்னவிருக்கின்றது? (பிரகாசமாய்) அரசே! தாம் இப்படிச்சொல்வது சரியன்று! பதிசென்றவிடத்திற்கு ஸ்திரீகள் செல்வார்கள் என்று, ஸாது க்கள் உரைப்பார்களே! நிலவு சந்திரனைக் கணமேனும் பிரிந் திருக்குமா? மின்னற்கொடி மேகத்தைவிட்டு ஒரு நொடிப் பொழுதேனு மகன்றிருக்குமா? இப்படி அசேதனமான பதார் தங்களிற்கூட இவ்வித தர்மமிருக்கும் பொழுது உத்தமமான மநுஷ்ய ஜன்பத்தைப்படைந்த யான் என் அன்பரைப் பறி கொடுத்து மற்றொருவனை மணப்பேனே?

இராகம் - தந்நியாஸி - தாளம்-ஆதி.

பல்லவி

மணந்தபின் - மணக்கலாகுமோ?
அணங்கு நான் - யாது செய்வேன்!

**அநுபல்லவி.**

தணவன்பின் - செல்லாவிட்டால்
வணங்க வொரு - தெய்வமுண்டோ?—மணந்.

**சரணங்கள்.**

கல்லென்றாலுங்-கணவனென்பார் !
புல்லென்றாலும்-புருஷனென்பார் !
சொல்லொணாத-வார்த்தையெல்லாம்
சொல்லியென்னை-வருத்தவேண்டாம் !— மணந்த.

ஒருவனுக்கு-மாலையிட்டு
மருவலாமோ-மற்றவரை ?
சிறுமையான-மங்கையரும்
சிரிப்பரன்றோ-இவளையென்றும் !— மணந்த.

நற்புகழை-கெட்டழிந்தால்
சற்பரனுந்-துணைசெய்வாரோ ?
புற்புதமாம்-வாழ்க்கையிலே
அற்பருமித்-தொழில்புரியார்!— மணந்த.

ஹா! ஹா! அந்தத் திவ்யஸுந்தர மங்கையைக்கொன்றுவிட்டும் யான் மற்றொருவனை மணந்துகொள்ளவேண்டுமோ? வேண்டாம்! சகல தர்மங்களையுமறிந்த தாமே இப்படி யுரைப்பது சரியன்று !

* "காமங் குறித்துப் பாவத்திற்
கலந்த பேதை யாருள்ளும்,
வாடங் கனிந்த பிறன்மனையை
மதிக்கும் பேதை போர்பயத்தாற்
றூங் கிழக்கு மறம்பொருள்போற்
றாற்று மின்ப மிருந்ததனாற்
றேமங் குதிப்பப் பிறன்மனைவி
தோள்கா முறுகல் கூழேலை !"

* பிள்ளையார் புராணம்.

முஞ்ஜ:—அடிபேதாய்! பரதாரத்தை விரும்பலாகா தென் பது சரியே! ஸகல சாஸ்திரங்களையு மறிந்திருக்கின்றயானும் தர்மத்திற்கு விரோதமாய் ஒருபொழுதும் நடப்பேனென்று நினைக்காதே. யானுன்னை மணந்து கொள்வதாகச் சொன்னேனேயன்றி இராக்ஷஸர்களைப்போற் பலாத்காரமாகவாயினும், சோரநாயகனைப்போல் திருட்டுத்தனமாகவாயினும் உன்னைக் கூடுவதாகச் சொல்லவில்லையே!

விலா:—அரசே! இவ்வித காரியத்திற்குஉலகத்தார்ஸம்மதியார்கள்! ஒருவனை மணந்த பிறகு மற்றொருவனை மணக்கக் கூடாதென்று வேதங்களும் சாஸ்திரங்களும் முறையிடுகின்றனவே! இதனால் எனக்குமாத்திரமன்று, உமக்கும் மஹாத்தான பாதகம் நேர்ந்துவிடும்! வேண்டாம்! இப்பாவியின்மீது வைத்திருக்கும் காதலை நீக்கும்!

* 'அந்தர முற்று னகனிகைபொற்பா
லழிவுற்றான்
இந்திர னொப்பா ரெந்தனை போர்தா
மிழிபுற்றார்!
செந்திரு வொப்பா ரெந்தனை போர்கின்
றிருவுண்பார்
மந்திர மற்று யுற்ற துரைத்தாய்
மதியற்றாய்!'

முஞ்ஜ:—பயசிலே! ஒரு புருஷனை மணந்து விட்டால் அவனெப்பொழுதுமா பதியாய்விடுவான்? அவன் இறந்துபோன பிறகுகூட அவனைப் பதியென்றுகொண்டு துர்கதியில் வீழ்வது அஸங்கதமாயிருக்கின்றதே! சாஸ்திரங்களிற்கூட ஸ்த்ரீகளுக்கு ஐந்து ஸந்தர்ப்பங்களில் புநர்விவாஹம் விதிக்கப்பட்டிருக்கின்றதே!

* கம்பராமாயணம்.

* "𑌨𑌷𑍍𑌟𑍇, 𑌮𑍃𑌤𑍇, 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌜𑌿𑌤𑍇;
𑌕𑍍𑌲𑍀𑌬𑍇 𑌚, 𑌪𑌤𑌿𑌤𑍇 𑌪𑌤𑍌,
𑌪𑌞𑍍𑌚𑌸𑍍𑌵𑌾𑌪𑌤𑍍𑌸𑍁 𑌨𑌾𑌰𑍀𑌣𑌾𑌂
𑌪𑌤𑌿𑌰𑌨𑍍𑌯𑍋 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇॥"

என்று நாரதர்முதலிய மஹர்ஷிகள்விளங்கச்சொல்லினர். அப்படியிருக்க நீ சஞ்சலப்படுவது அழகன்று. க்ஷணபங்குரமான காமோப சாந்திக்காக யானுன்னை யிச்சிக்கின்றேனென்று நீ நினைக்கவேண்டாம். ஹே விலாஸவதி! யான் உன்னுடைய திவ்யஸௌந்தரமான ஆக்ருதியைக்கண்டு, நீ குழந்தையாய் வளர்ந்துவந்ததுமுதல், உன்னையே மணந்து ஸௌகித்திருக்க விருப்பங்கொண்டேன். உனது கடாக்ஷவீக்ஷணத்தில் யான் ஈடுபட்டேன. உன் லாவண்யவலையில் கட்டுண்டேன். ஹே கல்யாணி! சிந்தையால் வேதனைப் பட்டுக் கண்ணீர் விடுகிற இந்நிலைமையை விட்டுவிடு! உன்னுடைய நவயௌவநம் ஸபலமாகும் வகையை நாடு! என்னைப் பார்த்தாவாகக்கொள்!

விலா:—ஹே பாபீ! உத்தமமான க்ஷத்திரியகுலத்திலுதித்து, உண்மையான சாஸ்திரங்களைக் கற்றுப்ந்தறிந்த நீயும் இப்படி மொழிவது சரியோ? போஜகுமாரருக்கே யுரியவளான என்னை நீ இச்சிப்பது தகுதியன்று! மஹா தார்மிகரும் புண்ணிய சீலருமான சூரஸேநமஹாராஜரது குலத்திலுதித்தேன். துஷ்டநிக்கிரஹம் சிஷ்டபரிபாலநம் என்னும் இருவகைத் தர்மத்தையும் நிலைநிறுத்தி ஸத்தியத்தையே திருடவிரதமாகக்கொண்டு விளங்கும் ஸ்ரீஸிந்துலமஹாராஜருடைய குலத்தை யடைந்தேன். சுத்தவீரரும் ஸத்திய

* "நஷ்டே, ம்ருதே, ப்ரவ்ரஜிதே,
க்லீபே ச, பதிதே, பதௌ;
பஞ்சஸ்வாபத்ஸு நாரீணாம்
பதி ரந்யோ விதீயதே"

ஸுந்தருமான போஜகுமாரருக்கு மாலையிட்டேன். அப்புரு ஷோத்தமரையடைந்து, உத்தமோத்தமமான பதிவ்ரதா தர்ம மார்க்கத்தில் எந்நாளும் இருக்க விரும்பிய யான், ஸர்வலோக நிந்தியமான இவ்வநாரிய காரியத்தைச் செய்யத் துணிவேனோ? குலத்தையும் கீர்த்தியையும் குணத்தையும் என்னையும் அழிக் கத்தக்கதான இப்பாபகிருத்தியத்தையோ யான் செய்வேன்? வேண்டாம்! இவ்வேழையின் மீது உனக்குண்டாயிருக்கும் காமத்தை வளர்க்காதே, நிவர்த்திசெய்.

* 'காமமே குலத்தினையும் நலத்தினையுங்
கெடுக்கவந்த களங்கம், அன்றிக்
காமமே தரித்திரங்க ளனைத்தினையும்
புகட்டிவைக்குங் கடாரம், மற்றுங்
காமமே பரகதிக்குச் செல்லாமல்
வழியடைக்குங் கபாடம், இன்னுங்
காமமே யனைவரையும் பகையாக்கிக்
கழுத்தரியுங் கத்தி காண்பாய்.'

அரசே! உலகத்தில் பாணிக்கிரஹண காலத்தில் அக்கினிஸாக்ஷி யாய்ப் பிறர் முகத்தைப்பார்ப்பதில்லையென்றுபாவையர் பிரமா ணஞ் செய்துகொடுப்பதை நீர் அறியீரோ? இப்படிப்பட்ட பிரமாணத்தை உல்லங்கநஞ்செய்பவர்கள்சந்திரஸூர்யர்களுள் ளளவும் அவியாத அக்கினியில் வீழ்ந்து பரிதவிப்பர்களென்று வேதசாஸ்திரங்கள் முறையிடுகின்றதைக் கற்கவில்லையோ? விவாஹமென்பது கேவலம்ஜௌகிகமான ஓர் ஒப்பந்தத்தைபோல் நினைத்தபொழுது நீக்கக்கூடியதன்றே! அஃதெதினாலும் அழி யாததும, ஸதிபதிகளைப் பந்திப்பது மாகிய பெரும் நிபந்தந மன்றோ! அப்படியிருக்க, உத்தமமான மநுஷ்ய ஜந்மத்தை யடைந்து, உயர்ந்த குலத்திற்பிறந்து, உத்தமனுக்கு வாழ்க் கைப்பட்டு, உறுதியான வழியைக்கைக்கொண்ட உத்தமிகளும்

* விவேக சிந்தாமணி.

கரையா வெய்ப்பே மெமைமீ
கருணை யைமேன மெனிமென்
றுரையா யிதுநா னழுகோ
னெரிநாந் நடிபே மலைதல்?

ராநு :—(விலாஸவதியைத் தழுவி) ஆ என் கண்மணீ! வன் இப்பாவியின் வயிற்றிற் பிறந்தனை? ஆ ஸஹோதரா! உனது தந்திரமே தந்திரம்! அற்ப காலமநுபவிக்கத்தக்க ராஜ்ஜியத்திற்காசைப்பட்டு என்னவென்ன வெல்லாஞ் செய்யத்துணிந்தனை?

ஹரி :—அம்மணீ! ஸகல தர்மங்களையுமறிந்த தாங்களே இவ்வாறெல்லாம் வ்யஸநப்படுவது தகுதியன்று!

* "ஆக்கமும் வறுமை தானும்
அல்லலு மகிழ்வு மெல்லாம்
நீக்கமில் லுயிர்கட் கென்றும்
நிலையெனக் கொள்ளற் பாற்றோ!
போக்குயர் கடவுட் டிங்கள்
வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவு நாளும்
முறைமுறை பொருந்திற் றன்றே!"

விலா :—(வாமாக்ஷிஸ்பந்தநத்தை நடித்து) ஆ! இஃதென்ன? திடீரென்று எனது இடக்கண் துடிக்கின்றதே?

ஹரி :—சுபம்! சுபம்!

விலா :—இந்த மந்தபாக்கியைக்கும் சுபம் கிடைக்கப் போகின்றதோ?

ஹரி :— அம்மணீ! ஸௌக்யமுந் துக்கமும் மஹான்களுக்கு இயல்பாயுள்ளனவன்றோ? ஆகலின் நன்னெறி பிறழாத தமக்கு நலம் ஸித்தமாய்க்கிடைக்கவே போகின்றது.

* கந்தபுராணம்.

**சசி:**—ஐயோ ! கால்கள் பொரிந்து போகின்றனவே ! எங்கேயாகிலும் ஓரிடத்திற்குச் செல்வோமென்றால், 'கண் ணுக்கெட்டியவரையினும் ஓர் ஊருங்காணப்படவில்லையே !

**ஹரி:**—அம்மணீ ! நீங்கள் அதோ அம்மண்டபத்திற் கருகாமையிலிருக்கும் மாமரத்து நிழலிற் சற்றுந்தங்கியிருங்கள் ! நான் சென்று ஸமீபத்தில் ஏதாயினும் ஊர் உளதோவென்று பார்த்து வருகிறேன்.

**சாரு:**—ஆம் ! அப்படிச் செய்வதுதான் யுக்தம்.

(யாவரும் நிஷ்கிரமித்தல்).

---

## மூன்றுங்களம்.

---

**இடம்—அதேவிடத்தில் மண்டபத்திற்குள் ஓர் அக்கிநிசரணம்.**

(பிறகு ஸோமஸுந்தர தீக்ஷிதர் அக்கிகுண்டத்தைக் கீழே வைத்து, தர்ப்பைகளைப் பரப்பி, நெருப்பை மூட்டிக் கொண்டிருக்க; சசிப்பிரபையும் சாருமதியும் விலாஸவதியும் ஒரு மரத்தடியில் வீற்றிருக்க, கோவிந்தபண்டிதர் பரபரப்புடன் பிரவேசித்தல்.)

**கோவி:**—சாஸ்திரிகளே ! எல்லாம் ஸித்தமாயினவோ ?

**ஸோம:**—ஸகலமும்ஸித்தமாய் விட்டது. இந்த ஸர்ப்ப ஹோமத்திற்குப் பூர்வாங்கமாகிய விக்நேச்வர பூஜை முதலிய கிரியைகளும் முடிந்துவிட்டன. இனிமேல் ஸங்கல்பம்பண்ணிக்கொண்டு முக்கியாஹுதி பண்ணவேண்டியது தான். பாக்கி வந்துவிட்டால் தொடங்கிவிடலாம். அதுவராததுதான் தாமஸம்.

**கோவி:**—அந்தோ ! அப்பொழுது சென்ற அப்பிள்ளையாண்டான் இன்னும் நெய்வாங்கிக்கொண்டு வாராமலிருப்பத

ற்குக்காரணம் யாதோ ? நாழிகையாய் விடுகின்றதே ! அம்மு ஹூர்த்தம் அதிக்கிரமித்துவிட்டால் ஸர்வப்ரயத்தநமும் வ்ய ர்த்தமாய் விடுமே! (சுற்றி நோக்கி) இதோ யாரோ இம்மரத்தடி யில் வெயிலினால் வருந்தி விச்ரமிக்கின்றனர் போலும். இவர் களைக்கேட்டால் ஏதாயினுந்திரவியங் கிடைக்குமென்று தோ ன்றுகின்றது. (அருகிற் சென்று) யாவரோ உயர்குலத்திலுதி த்த ஸ்திரீகள் போலிருக்கின்றனர் ! (பிரகாசமாய்) புண்ணிய வதிகாள் ! இங்கொரு இராஜகுமாரனுடைய பிராணனை ஸர்ப் பத்தினின்றுங் காப்பாற்றுவதற்காக ஒரு ஸர்ப்பஹோமம் பண்ணவேண்டியிருக்கின்றது. அதற்காகக்கொஞ்சந் திரவிய மிருந்து கொடுப்பீர்களாயின், அவனதுபிராணனைக்காப்பாற்றி யபலன் உங்களுக்குண்டாகும்.

சாரு:—ஐயோ பாவம்! இந்தாருங்கள்! (நான்கு நாணயங் களைக்கொடுத்து) பாவம் ! எந்த ராஜகுமாரனையோ ?

கோவி:—அடே ஐயா ராமகிருஷ்ணா! இங்கே சீக்கிரம் ஓடிவாடா!—அம்மணி! இந்தப் பேருதவிக்கு நான் தங்களுக்கு என்னபிரதி செய்யப்போகின்றேன்.

(வேகமாய்ப் பிரவேசித்து).

ராம:—என் அப்பா ! எதுக்குக்கூப்பிட்டே ?

கோவி:—(ஒரு நாணயத்தைக்கொடுத்து) இதை எடுத்து க்கொண்டுபோய்ச் சீக்கிரம் ஒரு வீசைநெய் வாங்கிக்கொண்டு ஓடிவா !

ராம:—நெய்யா ! இதோ ஒரு நிமிஷத்தில் வந்துவிட்டே ன் ! (நிஷ்கிரமித்தல்.)

சசி:—
விலா:— } எந்த இராஜகுமாரரோ ?

கோவி:—எந்த இராஜகுமாரனா ! இந்நகரில் இப்பொ ழுது எவனைப்பற்றிப் பிரமாதமான யுத்தம் நடக்கப் போகி ன்றதோ அந்த ராஜகுமாரனே !

சாரு:—இந்நகரின் பெயர் யாதோ? அஃது இன்னும் எவ்வளவு தூரமிருக்கின்றதோ?

கோவி:—அம்மணீ! இதுதான் ஆதித்தியவர்ம மஹாராஜர் ஆளும் உஜ்ஜயிநீநகரம்: ஒரு நாலுகுரோசங்கூட இல்லை.

விலா:—(ஜநாந்திகமாய்) உஜ்ஜயிநீ நகரத்திற்கே தான் நாம் வந்தோமோ!—அடிகாள்! அந்த இராஜகுமாரர் இப்பொழுது எங்கே இருக்கின்றனரோ?

கோவி:—அம்மணீ! அவன் இருக்குமிடம் ஒருவருக்குந் தெரியவில்லை. அவ்விளங்குமரன் தன் சிற்றப்பனுல் இராஜ்ஜியத்தினின்றும் வஞ்சனையாய்த் துரத்தப்பட்டு எங்கேயோ சென்றனனும். ஆயினும், அவனது பிராணநேசனுகிய காளிதாஸன் என்பவன் ஒருவன் மாத்திரம் அவன் உயிருடனிருப்பதாகச்சொல்லுகின்றுன்! ஆனுல், அவனுக்கும் அவ்விராஜ குமாரனிருக்குமிடந் தெரியவில்லையாம்.

சசி:—(ஜநாந்திகமாய்) ஆ! இஃதென்ன! விந்தையாயிருக்கின்றது! ஒருவேளை நம் செல்வன்தான் இவ்விராஜகுமாரனுயிருப்பனே? (பிரகாசமாய்) ஐயா! அவ்விராஜகுமாரன் எந்த நகரத்தைச் சேர்ந்தவனே? அவனது பெயர் யாதோ?

கோவி:—அவனது பெயர் தெரியாதவர் யாவர்? அத்தர்மராஜனது பெயரை ஒருதரஞ்சொன்னுல், வநவிடையூறுகளெல்லாம் ஊழிக்காற்றிற் பூழிப்பஞ்சுபோலாகுமே!

(போஜன் தள்ளாட்டங்கொண்டு ராமகிருஷ்ணனுடைய தோளைப்பற்றிக்கொண்டு நெய்ப்பாத்திரத்துடன் பிரவேசித்தல்).

கோவி:—(போஜனை நோக்கி) அப்பா! எனிவ்வளவுதாமஸம்? (நெய்யைக் கையில் வாங்கிக்கொண்டு) எனுே நமாதிரியாயிருக்கின்றுய்! இதோ இப்படி உட்கார்ந்துகொள். (போஜன் அவ்விடத்தில் ஒரு புறமாய் உட்கார) சாஸ்திரிகளே சீக்

கிரம் ஆரம்பித்துவிடுங்கள். அம்மணி! நீங்களும் இங்கேவந்து உட்காரலாம்!

ஸோம:—இதோ அப்படியே! (ஆசமநஞ்செய்து பிராணாயாமம் பண்ணி ஸங்கல்பம் சொல்லுதல்).

சசி:—(ஜநாந்திகமாய்) இச்சிறுவன் யாவனோ? இவனைப்பார்க்கும்பொழுதே என்கண்மணி போஜனைப் பார்ப்பது போலிருக்கின்றது!

சாரு:—ஆம்! ஆயினும் இவனது உடையைப்பார்த்தால் யாரோ பரதேசி போலிருக்கின்றனனே!

விலா:—(ஆத்மகதமாய்) இவரது முகம் ஏன் இப்படி தைந்யத்தை யடைந்திருக்கின்றதோ? ஒருவேளை இவர்தாம் அவ்விராஜகுமாரரோ?—அதெங்ஙனங்கூடும்! அவரிருக்குமிடம் யாருக்குந்தெரியாதென்று சொன்னாரே! (மூவரும் மண்டபத்தில் வந்துட்காருதல்.)

ஸோம:—என்ன! ஆரம்பித்துவிடலாமோ இல்லையோ?

கோவி:—அதற்கென்ன தடை? இவ்வுத்தமிகளுடைய பேருதவியினால், ஸகலமும் நிர்விக்நமாகவே முடியும்.

ஸோம:—அதற்கையமுண்டோ?

*ஓம் அத்ய ஶ்ரீ பக்வதச்சஷசாயிந : ப்ரஸாதஸித்யர்த்தம் ஶ்ரீ போஜகுமாரஸ்ய ஸர்ப்பபய நிவாரணார்த்தம், ஸமஸ்தாரிஷ்ட விநாசார்த்தஞ்ச ஸர்ப்பஹோமம் ஹோஷ்யாமி, ஹோமஸம்ரக்ஷணார்த்தம் ப்ராஹ்மணம் த்வாம் வ்ருணே. (தர்பையைக் கொடுத்தல்.)

* ஓம் அத்ய ஶ்ரீ பக்வதச்சஷசாயிந : ப்ரஸாதஸித்யர்த்தம் ஶ்ரீ போஜகுமாரஸ்ய ஸர்ப்பபய நிவாரணார்த்தம், ஸமஸ்தாரிஷ்ட விநாசார்த்தஞ்ச ஸர்ப்பஹோமம் ஹோஷ்யாமி, ஹோமஸம்ரக்ஷணார்த்தம் ப்ரஹ்மாணந் த்வாம் வ்ருணே.

கோவி :— ததாஸ்து ! (போஜனை நோக்கி) அப்பா ! ஏன் சாய்கின்றாய் ? ஒருவேளை உனக்குப் பயமாயிருந்தால் உள்ளே போகலாம் !

போஜ:--அஃதொன்றுமில்லை ! தாங்கள் ஸமீபத்திலிருக்கும்பொழுது யாருக்குத்தான் பயம் ? அடியேனுமிந்த ஹோமத்தைப்பார்த்துக் கொண்டிருக்கும்படி தாங்கள் திருவுளஞ்செய்யவேண்டும் !

கோவி:—ஆனால் சரி ! இப்படியே ஒரு புறமாய் உட்கார்ந்துகொள் ? (போஜன் அப்படியே உட்காருதல்).

சாரு:—அக்கா ! இச்சிறுவனுடைய குரலைக் கேட்டீர்களோ ?

சசி:—என்னவோ ? இவ்விளங்குமரனைப் பார்க்கப் பார்க்க என்மனத்தில் தோன்றாத எண்ணங்களெல்லாந் தோன்றுகின்றன.

விலா.—ஆ ! எனக்கு மப்படியே தோன்றுகின்றன.

ஸோம.—(ஸர்ப்பங்களை ஆஹ்வாநம் பண்ணிக்கொண்டு)

[illegible]

* ஓம் !

“ ஆயாஹீந்த்ரபதிபிரீளிதேபிர்
யஞ்யமிமம் நோபாகதேயம் ஜுஷஸ்வ;
த்ருப்தாம் ஜஹுர் மாதுளஸ்யேவ யோஷா
பாகஸ்தே பைத்ருஷ்வஸேயீ வபாமிவ !

**போஜ:**—(ஆத்மகதமாய்) அந்தோ ! என்னவோ மயக்கம் போல்வருகின்றதே !

**ஸோம :**—ஓம் !

ஓம் தக்ஷகாய ஸ்வாஹா ! ஓம் தக்ஷகாயேதந் நமம ! (அக்கினியில் ஆஹுதிசெய்தல்)

**போஜ :**—(ஆத்மகதமாய்) ஆ ! இஃதென்ன ! என்னை அறியாமலே என் தேஹம் சோர்வடைகின்றதே ! வாய் உலர்கின்றது ! எனது அங்கங்கள் கம்பமடைகின்றன ! உட்கார்ந்திருப்பதற்குக் கூடச்சக்தியற்றவனு யிருக்கின்றேனே ! எவ்வளவு த்ருடஞ்செய்துகொண்டாலும் எனதுமநம் பிரமையடைதல் போலிருக்கின்றதே !

---

யசஸ்கரம் பலவந்தம் ப்ரபுத்வம்
　　தமேவராஜாதிபதிர பபூவ;
ஸங்கீர்ணநாகாச்வபதிர் நராணும்
　　ஸுமங்கல்யம் ஸததம்தீர்க மாயு : !"

* " நமோ அஸ்து ஸர்பேப்யோ
　　யேகேச ப்ருதிவீமநு ;
யே அந்தரிக்ஷே யேதிவி
　　தேப்பஸ் ஸர்பேப்யோ நம : !"

**சசி** :—(ஜநாந்திகமாய்). இச்சிறுவனைப் பார்த்தால் ஏதோ வருத்தமுற்றவன் போற்றோன்றவில்லையா ?

**சாரு** :—(ஜநாந்திகமாய்) ஆம் ! அப்படித்தானிருக்கவேண்டும் !

'சோர்ந்த யாக்கையும் சோர்ந்த முடியும்
கூர்ந்த வியர்வுங் குறைப்பல் லியையும்
வற்றிய வாயும் வளைந்த வுறுப்பும்
உற்று நோக்குமிவர்க் குன்றா விளங்குறுமே !'

**விலா** :—(ஆத்மகதமாய்) அந்தோ ! இவருடைய வருத்தத்திற்குக் காரணம் யாதோ ? இவரைப்பார்க்கப் பார்க்க ஏனோ என்மநம் இவரிடத்தில் பக்ஷப்படுகின்றதே

**ஸோம** :—ஓம் !

* "[illegible]
[illegible]
[illegible]
[illegible] ||"

**ஓம் வாஸுகயே** ஸ்வாஹா ! ஓம் வாஸுகயேஸர்பராஜாயே தந் நமம ! (மறுபடியும் ஆஹுதிசெய்தல்)

**போஜ** :—(ஆத்மகதமாய்) அந்தோ என்னை எங்கேயோ தூக்கிக்கொண்டு போகின்றதே. ஈசா ! என்னை நீ தான் காப்பாற்றவேண்டும் !

**சாரு** :— ஏன் இச்சிறுவனுடையதலை யாட்டங்கொள்கின்றது ?

---

*" யேதோரோசநேதிவோ
யேவாஸூர்யஸ்ய ரச்மிஷு;
யேஷா மப்ஸு ஸதஸ்க்ருதம்
தேப்யஸ் ஸர்பேப்யோ நம : !"

கோவி :—அப்பா ! பயப்படுகின்றனையோ ? வேண்டுமாயின் என்னெதிரில் உட்கார்ந்துக்கொள் ! இதோ ஹோமமும் முடிவதற்காயிற்று ! இன்னமோர் ஆஹுதிதான் !

ஸோம :—ஓம் !

*" 𑌯𑌾 𑌇𑌷𑌵𑍋 𑌯𑌾𑌤𑍁𑌧𑌾𑌨𑌾𑌨𑌾𑌂
𑌯𑍇𑌵𑌾𑌵𑌨𑌸𑍍𑌪𑌤𑍀𑌂𑌰𑌨𑍁 ।
𑌯𑍇𑌵𑌾𑌵𑌟𑍇𑌷𑍁 𑌶𑍇𑌰𑌤𑍇
𑌤𑍇𑌭𑍍𑌯𑌸𑍍 𑌸𑌰𑍍𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌮𑌃"

ஓம் அநந்தாய ஸ்வாஹா! ஓம் அநந்தாயாதி சேஷாயேதந்நம ! (பூர்ணாஹுதி பண்ண, ஒரு ஸர்ப்பம் போஜனது தலைமீது பட்டு அக்கினியில் வீழ்ந்து பஸ்மமாதல்)

போஜ :—ஹா அப்ப (மூர்ச்சித்து வீழ்தல்).

யாவரும் :—ஹா ! ஹா !! ஹா !!!

கோவி :—இதென்ன ! ஆச்சரியமாயிருக்கின்றது !

விலா :—ஐயோ ! இவர் திடீரென்று கீழேவிழுந்து விட்டனரே !

சாரு :—அந்தோ ! ஸர்ப்பந்தீண்டிவிட்டது போலிருக்கின்றது ?

விலா :—உயிருடன் பிழைத்திருப்பரா ?

கோவி :—(போஜனைத்தடவிக்கொண்டு) ஆ கஷ்டம் ! (நடுக்கத்துடன்) சாஸ்திரிகளே ! நிச்வாஸம் வரவில்லையே ! இதென்ன ஸங்கடம்! இவனை ஸர்ப்பந்தீண்டினதெப்படி ?

---

*" யா இஷவோ யாதுதாநாநாம்
யேவாவநஸ்பதீ ரநு;
யேவா வடேஷு சேரதே
தேப்யஸ் ஸர்ப்பேப்யோ நம : !"

சாந :—ஒருவேளை இவன் தான் அவ்விராஜகுமாரனோ ?

கோவி :—ஐயோ ! கைகால்களெல்லாந் தடித்து விட்டனவே ! பிராணன் போய்விட்டது போலிருக்கிறதே !

ஸுந்தரி :—ஐயோ ! கொஞ்சந் தீர்த்தங்கொடுங்களேன் !

ஸோம :—என்ன ஆச்சரியமாயிருக்கின்றது ! அச்சிறுவனு விழுந்துவிட்டனன் !

கோவிந்த :—(தீர்த்தகலசத்தை வாங்கி, போஜனது வாயில் கொஞ்சந் தீர்த்தத்தைவிட்டு) அந்தோ ! தீர்த்தங்கூட இறங்கவில்லையே !

யாவரும் :—(போஜனருகிற்சென்று) ஹா ! கஷ்டம் !

சசி :—ஐயோ ! வியர்வை கொட்டுகின்றதே ! யாராவது துடையுங்களேன் ?

கோவி :—(மேல்காவியங்கியைக் கழற்றி ஆச்சரியத்துடன்) ஆ ! இவனே அந்தவிராஜகுமாரன் ?

சசி :—(நோக்கி) அந்தோ ! என் செல்வன் போஜனே ! (மூர்ச்சித்து வீழ்தல்).

விலா :—என் பிராணபந்துவே ! (மூர்ச்சித்து விழ்தல்).

சாந :—என் கண்மணியே ! (மூர்ச்சித்து வீழ்தல்)

கோவி :—(சோகங்கொண்டு) இது கருணாத்புதமாகவல்லவோ இருக்கின்றது ! அந்தோ ! இந்த ஸாத்விகள் இச்சிறுவனுக்கு வேண்டியவர்களே ! (நோக்கி) நமது நாட்டின் ராஜஸ்திரீகளே ! ஐயோ ! இவர்களும் மூர்ச்சித்து வீழ்ந்து விட்டனரே ? இப்பெரும் ஸங்கட்டத்திற்கென்ன செய்வது ?

ஸோம :—(போஜனைத்தடவி) இருங்கள் ! அவஸரப்படாதீர்கள் ! (கைபிடித்து சோதித்து) இவனது பிராணனுக்கு ஓர் அபாயமுமில்லை. இவ்வாஜ்ஜிய சேஷத்தைப் புரோக்ஷித்தால் உடனே எழுந்துவிடுவான். (திரும்பியும் ஹோமம் பண்

ணினவிடத்திற்குச் சென்று ஆஜ்யதொன்னையை யெடுத்து பாவநஞ்செய்தல்).

சாரு :—(கண்விழித்துப் போஜனைத் தழுவிக்கொண்டு) ஆ ! என்னருமைக்கண்மணியே ! இவ்வேழைகளைக் கண்ணெடுத்துப்பாரயோ ?

இராகம் - முகாரி - தாளம் - ரூபகம்.

பல்லவி.

எப்படி உயிர்த்திருப்போம் - என்செல்வனே !
எப்படி உயிர்த்திருப் போம் !

அநுபல்லவி

அப்பாதகன் முஞ்ஜன - அரியகையினின்றுந்
தப்பினையென்றன்றோ-நாமிவையாம் தாங்கினோம்!—எப்.

சரணம்.

எவ்வித விடையூறு - மிலேசாயெண்ணுமுனக்
கிவ்வித ஆபத்து-எங்கிருந் தணுகிற்றோ ?
செவ்விதழ்க் கமலத்தைத்—திரஸ்காரஞ் செய்யுமுன்றன்
பவ்விய முகசந்த்ரன்-பாவிக்கவில்லையே!— எப்.

விலா :—(கண்விழித்துப் போஜனை நோக்கி) ஆஹா ! இஃதென்ன விந்தை !

இராகம் - முகாரி - தாளம் - ஆதி.

பல்லவி.

என்னன்பர் - இவர்தாமோ
சிந்ஹம் சிறிதேனுந் - தெரியவில்லையே!

அநுபல்லவி.

மன்னவன் ஸோதராகில்
மன்னிப்பாரோ வென்னை!— என்

சரணம்.

என்காந்தா! என்னேடுண்டோ வைரம்,
இல்லா விட்டால்
என் காலக்கேடே இப்பிரகாரம்,
என் பிராணேசர்க்கு
வன்காட்டில் யார்காண் பரிவாரம்,
வன்பிழை செய்தாலும்
உன் கான் மலரன்றோ ஜீவாதாரம்;
உமக்கும் சிருங்காரம்,
பாபமோ தாபகாரணம்
கர்ம்ம மரமதாரணம்
அநிதிறும் நன்றுமாரணம்
அந்தாருணா! — என்

அரி:—(கண்விழித்து எழுந்து) ஹாபுத்ரகா! இக்கதியை யடையவோ என் வயிற்றிற்பிறந்தனை? உலகத்தை வெறுத்துக்காவியுடுத்துக் காட்டிற் பரிதவித்து இப்படி இறக்கவோ நீ வளர்ந்தாய்?

நல்லுணவருந்தி நல்லணி பொருந்தி
நல்லாடை தரித்து நலமுடனிருந்த நீ
புல்லரிசிதின்று புன்னீரருந்தி
தொல்லைப்படுவையோ துணிந்துரைப்பாயோ!

பஞ்சணைமீதும் பல்லக்கின்மீதும்
கொஞ்சிவிளையாடிக் கொலுவிலிருந்த நீ
வஞ்சனையாலிங்கு வனந்தனிலலைந்து
பஞ்சைபோல் மரிப்பையோ பகர்ந்திடுவாயே!

செபந்தமென்றறிந்துஞ் சொல்லாதொருமொழி
விந்தையே என்னை நீ வேறுகொண்டாயோ ?
சிந்தனைசெயாமல் ஸ்நேஹமும் பாராமல்
வந்தெனையணையாமல் மரித்தைபோ சொல்லாய் !

ரோகி :—ஆஹா ! இம்மாதரசி தான் க்ஷிப்ரபாதேவி யார் ! இவ்வதிதோத்தமை தான் விலாஸவதியாயிருக்கவேண்டும் ! இப்புண்ணியவதியே பூபாளநாட்டரசனது பட்டமஹிஷி சாருமதிதேவியாராக வேண்டும் ! அந்தோ ! இவர்களது ஸங்கடத்தையான் எப்படி நிவாரணம்பண்ணப்போகின்றேன் ?

**இராகம் - பிஹாக் - தாளம் - ஏகதாளம்.**

**கண்ணிகள்.**

கருணைகூர்ந்திவர்களைக் - கண்ணெடுத்துப் பாராயோ ?
கருணைக் கடவுளே - காத்தருள்வாய் !
கரையுமே கல்லுங் - கன்மனமுமுருகுமே !
உரிமையோ வினக்கினி - உரையாயுபேக்ஷித்தல் ? கரு.

காலகாலனென்றுங் - காலகண்டனென்றுஞ்
சீலப்பெயர் தானும் - ஸித்திக்குமோ சொல்லாய் ! கரு

காண்பதுங்கனவோ - காலத்தின் கொடுமையோ ?
வீண் புவிபாரமே - வேதக்கனலும் ! காரு.

ஸுந்தரி :—(போஜனைச் சற்றுநேரம் உற்றுநோக்கிக் கொண்டிருந்து) இவ்விராஜகுமாரருக்கு ஒரு பயமுமில்லை ! பாருங்கள் ! இவரது கால் கட்டைவிரல் அசைகிறது !

சாரு :—என் கண்மணியும் பிழைப்பனு ? என் விலாஸவதியும் ஸுகித்திருப்பாளா ?

ஸுந்தரி :—அம்மணீ ! இப்பெண்மணியின் கற்பே இவளையும் இவளுடைய பர்த்தாவையும் என்றென்றுங் காப்பாற்றுமே !

**கோவி:**—ஆம்!

*'அவனுக் குயிரவ் வளவே யெனினும்
இவள்கற் பினிவி னுறுமோ விசைவாற்
றவளத் தனிவா ணகைதன் னுரையைச்
சிவனுக் கருணான் முறை தேர்ந்திலரோ!'

**சசி:**—அஃதேது! அஸாத்தியம்! அஸாத்தியம்!!

**ஸோம:**—ஸகலத்தையு மறிந்த தாயே! ஒருபயமுமில்லை. இனி மேன்மேல் சிரேயஸ்ஸையடைந்து ஸாம்ராஜ்யாதிபதியாய் இருப்பதற்காகத்தான் இவ்விளங்குமரனை ஸர்ப்பந் தீண்டியதென்று நிச்சயமாய்க்கொள்ளுங்கள். இதனுடன் இவனுக்கு விதித்திருந்த ஆபத்துக்களெல்லாம் நீங்கின! இனி பந்துமித்திரர்களோடுகூடி அழிவிலாப் புகழ்பெற்று விளங்கப் போகின்றனன்! இதோ இந்த மந்திர பரிபூதமான ஆஜ்ய சேஷத்தையும் புரோக்ஷிக்கின்றேன்! தூங்கி எழுபவன்போல் ஒரு க்ஷணத்தில் எழுந்துவிடுகின்றான் பாருங்கள்.

**சசி:**—எல்லாந் தங்களுடைய அநுக்கிரஹமே!

**ஸோம:**—(ஆஜ்யத்தை தர்ப்பையால் தடவிக்கொண்டு)

†"𑌕𑌾𑌲𑌿𑌕𑍋 𑌨𑌾𑌮 𑌸𑌰𑍍𑌪𑍋
𑌨𑌵𑌨𑌾𑌗𑌸𑌹𑌸𑍍𑌰𑌬𑌲𑌃।
𑌯𑌮𑍁𑌨𑌹𑍍𑌰𑌦𑍇𑌹 𑌸𑍋𑌜𑌾𑌤𑍋
𑌯𑍋𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌵𑌾𑌹𑌨𑌃॥"

* பாரதம்.

† "காளிகோ நாம ஸர்ப்போ
நவநாக ஸஹஸ்ர பல:;
யமுநஹ்ரதேஹ ஸோஜாதோ
யோநாராயணவாஹந:!"

*"[illegible]
[illegible]
[illegible]
[illegible]"

(போஜனருகிற்சென்று ஆஜ்யத்தைப் புரோக்ஷித்துக்கொண்டு) ஓம்!

† "[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥"

---

* "யதி காளிக தூதஸ்ய
யதிகா : காளிகாத்பயாத் :
ஜந்மபூமி மதிக்ராந்தோ
நிர்விஷேயாதி காளிக :!"

† "ஸர்ப்பாபஸர்ப்பபத்ரந் தே
தூரங் கச்ச மஹாயச: ;
ஜநமேஜயஸ்ய யஞ்யாந்தே
ஆஸ்தீக வசநம் ஸ்மர.
ஆஸ்தீக வசநம் ஸ்ம்ருத்வா
ய: ஸர்ப்போ ந நிவர்த்ததே;
சததா பித்யதே மூர்த்நி
சிம்ச வ்ருக்ஷபலம் யதா."

*"யதிக்ஷிதாயுர் யதிவா பரேதோ
யதிம்ருத்யோரந்திகம் நீத ஏவ ।
தமாஹராமி நிர்ருதேருபஸ்தா
தஸ்பார்ஷமேநம் ஶதஶாரதாய ॥
ஶதம் ஜீவ ஶரதோ வர்த்தமாந:
ஶதம் ஹேமந்தாந் ஶதமு வஸந்தாந் ।
ஶதமிந்த்ராக்நீ ஸவிதா ப்ருஹஸ்பதி:
ஶதாயுஷா ஹவிஷேமம் புநர்து: ॥"

**கோவி**—(போஜனை நோக்கி) தெய்வாதீநம் ! இப்பொழுதுதான் மெதுவாய் மூச்சுவருகின்றது.

**போஜ**:—(மெதுவாய் மூர்ச்சையினின்றுந் தெளிந்து) ஹா ! அம்ப! சசிப்ரபா !

**சசி** :—(ஓடிவந்து போஜனையணைத்துக்கொண்டு) ஆ ! என்துரையே ! இதோ இருக்கின்றேன்!

**போஜ**:—(நோக்கி) ஆ ! இதென்ன! பிரமையோ ? என்னருமைத்தாய் சசிப்ரபையோ என் முன் நிற்பது ? ஆ ! என் அத்தை சாருமதி ! என் பிரிய விலாஸவதி !! இஃதென்ன ! கனவோ யான் காண்பது !

---

* "யதிக்ஷிதாயுர் யதிவா பரேதோ
யதிம்ருத்யோரந்திகம் நீத ஏவ ;
தமாஹராமி நிர்ருதேருபஸ்தா
தஸ்பார்ஷமேநம் சதசாரதாய.
சதம் ஜீவ சரதோ வர்த்தமாந:
சதம் ஹேமந்தாந் சதமு வஸந்தாந்;
சதம் இந்த்ராக்நீ ஸவிதா ப்ருஹஸ்பதி:
சதாயுஷா ஹவிஷேமம் புநர்து:!"

நோவி :—இராஜகுமாரா ! நீ காண்பதெல்லாம் வாஸ்தவமே ! உனக்குநேர்ந்த இடையூறுகளெல்லாம் தெய்வாநுகூலத்தால் நீங்கின ! இனி உன பிரியபந்துக்களையடைந்து ஸுகித்திருப்பாய் !

போஜ:—அடிகாள் ! தாங்கள் செய்த இப்பேருதவிக்கு யான் என்ன பிரதி செய்யப்போகின்றேன்.

கோவி :—
ஸோம :— } இராஜகுமாரா ! நீ தீர்க்காயுஷ்மானுய்ச்சீக்கிரத்திலேயே ஸகல ஸாம்ராஜ்ஜியத்தையும் பெறுவாயாக !

போஜ :—எல்லாந் தங்களுடைய ஆசீர்வாதமே !

கோவி :—அரசே ! உனக்கினி யாதொரு குறையும் நேரிடாது !

ஈசனே நின்மேல் நேசமாயிருப்பார் !
பற்பலவுதவுங் கற்பகத்தருப்போல்
ஊழி நீடூழி வாழுதி ! நினக்குப்
பெரும்புகழ் புவியில் நிரம்பியோங்குக !

போஜ :—அடிகாள் !

வழிபடுந் தெய்வமாய் வந்திவண்தாமே
மொழியிலெமக்கு முட்டுப்பாடுறுமோ !
நுமபோற் பெரியோர் நோக்கமிருக்கில்
எப்போலரசர்க் கென்ன குறைபாம் !

சசி :—என் கண்மணீ ! உன்னைக்காணுது நாங்கள் என்ன வருந்தினேம் தெரியுமோ ?

போஜ: —அம்மா! எல்லாம் அறிந்தேன் ! எல்லாம் முன் ஜந்மத்தில் நான் செய்த பாபத்தின் பலனே !

சாரு:—என்னருமைச் செல்வமே! இஃது ஒருவருடைய செயலுமன்று ! ஈசனது ஸங்கல்பம் இப்படி எல்லாம் நடக்க வேண்டியிருந்தது !

சசி :—என் செல்வனே ! நீ யன்று ராத்திரி என் கண் மணி விலாஸவதியினிடம் சொல்லுவதாகச்சொன்னவார்த்தை அமிருததாரைபோல் எனக்கு ஆநந்தத்தைக் கொடுத்தது. பிறகு அப்பாதகன் வினது சிற்றப்பன் புரிந்த வஞ்சனையால் சாந்தமும் க்ஷமையுமே யுருவெடுத்து வந்திருக்கும் கற்பிற்சரசி யாகிய நமது விலாஸவதி உனக்காக பட்ட கஷ்டங்களை நான் என்ன சொல்வேன் ! ஆயினும் உங்களை இருவரையும் ஈசுவரன் இன்றாயினுங் கூட்டிவைத்தனரே !

விலா:—(ஆத்மகதமாய்) ஐயோ ! யான் மஹாபாதகியானேனே ! என் பிராணநாதருடைய பிரியத்துக்கும் நான் பாத்திரையாவேனே ?

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ ! இதென்ன ! இவ்விலாஸவதியைக் காணும்பொழுதே என மநம் களிப்புஞ் சிநேகமுங் கொள்ளுகின்றதே ! இவள் பிரபாநவென்றறிந்தும் என் மநம் இவளிடத்தினின்றும் விலகவில்கின்றதே !

சசி :—என் கண்மணீ ! என் இவளிடத்தினின்றும் முகத்தைத் திருப்பிக்கொள்ளுகின்றாய் ! இவளுடைய பாதிவ்ரத்யமஹிமையினாலன்றோ நீ க்ஷேமமாயிருக்கின்றாய்! இவ்வுத்தமியினாலேயே உனக்குச் சிறந்த கீர்த்தி கிடைக்கப்போகின்றது ! இவளை ஸ்வீகரிப்பாய் !

விலா:—(ஆத்மகதமாய்) என் பிராணநாதர் என்ன சொல்லுவரோ ?

போஜ:—அம்பா ! என்னை மன்னிக்கவேண்டும் ! இக்கொடுமைக்கெல்லாம் காரணமாகிய அந்ததுரோஹியினுடைய ஆதீநத்திலிருந்த இவளை யான் எப்படி அங்கீகரிப்பேன் ? உலகத்துளோர் நம்மைப் பழியார்களோ ?

விலா :—(ஆத்மகதமாய்) அந்தோ ! இவ்வவதூறுக்குப் பாத்திரையாகவோ யான் இன்னும் இப்பாழுடலைச் சுமந்திருக்கின்றேன் ! (கண்ணீர் விடுதல்)

**சசி:**—என் கண்மணி! இவளுடைய கற்பின் பெருமையை அறியாமையால் நீ இவ்வாறுரைத்தனை? இவளைக் கைப்பற்றி எம்மைக்களிக்கச் செய்வாய்!

**போஜ:**—என்னருமைத்தாயே! யான் ஸம்மதிக்கின்றேன்; சான்றோர் ஸம்மதிப்பரோ?

**சசி:**—என் செல்வனே! இப்படி எங்களுடைய மநம் நோகும்படி நீ தெரியாமல் உரைப்பது தகுதியன்று!

உயர்வர மக்களால் துயரம் நீங்கி
இருமையும் பெறுவது பெரியவர் இயற்கை!
தருமமே யெல்லா முருவாய் வந்து
நினையீன்று பெற்ற நின்றாயுந் தந்தையும்
உளமெலி வாடுந் தவறுவ தழகோ?
சொல்லை மறுத்த நல்ல புதல்வரைப்
பெற்றோர் யார்துயருற்றோர் சொல்லாய்!

ஏதோ! இவையெலாஞ் சொல்லி நினக்கொரு கெடுதியைச் செய்ய நினைப்பதாய்க் கொள்ளாதே. உனது நன்மைக்காகவே சொல்லுகின்றேன்! இவள்மீது பழிசொல்லின் நாக்கு அழுகியறுந்து விழும்! இவளைக் கைவிடிலோ தர்மதாரபரித்தியாக மஹாதோஷத்தையடைந்து குலத்தோடு நசிக்கவேண்டி வரும்!

**விலா:**—(கண்ணீர் சொரிய) என் பிராணநாதர்மீது பழி சொல்வதிற் பயனென்ன! இவை எல்லாம் யான் பூர்வஜந்மத்திற் செய்தபாவமே!

**சாரு:**—(ஜநாந்திகமாப்) குழந்தாய்! அழாதே! உனது கன்னடத்தை உன்னை எந்நாளும் காப்பாற்றும்.

**விலா:**—(சோகராக்கிரந்தையாய், ஜநாந்திகமாய்) அம்மா! யான் இனியும் பிழைத்திருக்கவேண்டுமோ?

போஜ — (ஆத்மகதமாய்) இவளை ஸ்த்ரீதோஷி என்றறிந்தும், ஏனோ மந்திரத்தினாற் கட்டுண்ட ஸர்ப்பம்போல், என் மனமானது இவள்விஷயத்தில் ஒடுங்கியே போகின்றதே! தோஷியெனத்துணிந்து விடுவதற்கும் மனம் வரவில்லை, தொடுவதற்கும் மனம் வரவில்லையே! இத்தர்ம ஸங்கடத்திற்கென்ன செய்வேன்.

(பிறகு புத்திஸாகரரும், காளிதாஸரும், ஹரிஹரருடன் பிரவேசித்தல்)

புத்தி:— ஹரிஹரரே! தேவியார் எங்கே? காணோமே! இம்மரத்தடியில் ஒருவருமில்லையே!

காளி:— (நோக்கி) இம்மண்டபத்தில் யாரோ கூட்டமாயிருக்கின்றனர்!

ஹரி:— (நோக்கி) அவர்களே!

காளி.— ஆ! (நோக்கி) ஆ! இஃதென்ன யான் காண்பது! கனவோ? நினைவோ? என் பிராணநேசன் போஜனே இங்கே நிற்கின்றவன்?

புத்தி:— என்ன! நம் போஜனா! (ஓடிப் போஜனைக்கட்டியணைத்து) என் கண்மணி! நீ பிழைத்திருக்கின்றாயோ?

போஜ:— எந்தையே! சரணம்! யான் புத்தியின்றிச் செய்த அபராதங்களை எல்லாம் மன்னித்தருள வேண்டும்!

புத்தி.— என் செல்வனே! உனக்கு அமோகமாய் மங்களமுண்டாகுக!

போஜ.— அடிகாள்! இப்பிராமணோத்தமர்கள் தாம் என் பிராணனைக் காப்பாற்றினர்! ஸர்ப்பந்தீண்டித் துடித்த நான் இவர்களில்லாவிடில் இந்நேரம் இறந்திருப்பேன்?

நோவி:— எங்களாலென்ன செய்யப்பட்டது? அம்மாது சிரோமணி விலாஸவதி தேவியின் கற்பின் மஹிமையே உன்னைக் காப்பாற்றிக்கொடுத்தது.

**புத்தி** :—ஐயகோ ! கோவிந்தபண்டிதரா ! தங்களைக்கண்டு அநேக நாட்களாயின ! தாங்கள் என்று தாரையைவிட்டுச் சென்றீர்களோ, அப்பொழுதே அந்நகர்பாழடைந்து விட்டது ! அதர்மம் நான்குபாதங்களோடுங் உலாவருகின்றது ! (விலாஸவதியை நோக்கி) இக்கற்பிற்கரசி விலாஸவந்தேவி ஏன் கண்ணீர் சொரிகின்றனள் ?

**போஜ** :—அடிகாள் ! யாவற்றுக்கும் இப்பாவியே காரணம் ! அந்நியனுடைய ஆதிக்கத்திலிருந்த இவளை யான் எப்படி அங்கீகரிப்பேன் ?

**புத்தி** :—இஃதென்ன பேதைமை ! நீ சங்கை கொள்வது ஆச்சரியமே ! இப்பெண்மணியின் பாதிவ்ரத்தியமகிமையை யான் அறிவேன்.

* 'பெண்ணிலும் நல்லள் ! மலர்மகள் கலைமகள் கலையூர்
பெண்ணிலும் நல்லள் பெரும்புகழுடை விசாலைநி
கண்ணிலும் நல்லள் ! கற்றவர் கற்றிலா தவரும்
முன்றுமீது [illegible] மிசைமெய் [illegible] !'

ஆகலின், தடையின்றி இவ்வதிதைச்தமையைக் கைப்பற்றி எனக்கும், ஏனையோர்க்கும் மகிழ்ச்சி விளைப்பாயாக !

**காளி** :—நண்ப ! எனிந்தச் சஞ்சலம் ! ஒழிப்பாய் இவ் வீண் கவலையை ! உனக்குக் குருவயுந் தந்தையாயுமிருக்கும் நமது மந்திரியாரே யுனக்கு அநுமதி தந்தனர் ! அவர் உனக்கிட்ட பிரதிஞ்ஞையையும் நீக்கிவிட்டனர் ! இனி என்ன தாமஸம் ?

**போஜ** :—அடிகாள் ! தங்கள் சொல்லுக்கு நானென்ன தடை சொல்லப்போகின்றேன் ?

**புத்தி** :—(விலாஸவதியை நோக்கி) இராஜபுத்திரி ! இதைப்பற்றி நீ வருந்துவது தகுதியன்று ! இப்படிக்கெல்

---

* கம்பராமாயணம்.

லாம் நடக்கவேண்டுமென்பது ஈசனது ஸங்கல்பம் போலும்! ஆகலின், உன் பிரிய வல்லபனையடைந்து மகிழ்ந்திருப்பாய்!

விலா:—அடிகாள் நீங்களே எனக்குத் தந்தையார்! எல்லாந் தங்களுடைய ஆசீர்வாதமே! (புத்திஸாகரரை வணங்குதல்)

புத்தி:—தீர்க்க ஸௌமங்கலீ பவ!

சாரு:—அடிகாள்! புத்தி ஹீநத்தினல் நாங்கள் தங்களுக்குச் செய்த அபராதத்தை மன்னிக்கவேண்டும்! இப்பொழுதன்றோ தங்களுடைய உசிதமான எண்ணம் விளங்குகின்றது.

புத்தி:—அம்மணி! யான் சிறிதேனும் உங்களுடைய குறைகுணங்களை யோசியாமல், இவ்வசிதோத்தமை விலாஸவதிக்குப் பொருந்தவழிதேடிக்கிேதன்! வஞ்சகமே யுருவெடுத்து வந்திருக்கும் முஞ்ஜராஜனுடைய ஆதீநத்திலிருந்தபடியால் நங் கண்மணி போஜனுக்கு அவனால் எதாயினும் ஆபத்து நேரிடுமென்று நினைத்து, அவனை இம்மாதுசிரோமணி விலாஸவதியினிடம் நெருங்கவேண்டாமென்று தடுத்துவந்தேன்! உங்களையுங் கலங்கியாது விடுத்தேன்! இவற்றையெல்லாம் பொறுத்து என்னை மன்னிக்கவேண்டும்!

சாரு:—அடிகாள் நீங்களேன் வீணாய் மனவருத்தப்படவேண்டும்!

> * "புகன்றிடு நன்மை தீமை
> பொருந்துறூழ் வினையா மீசன்
> ஜகந்தனி லுயிர்கட் கெல்லாந்
> தானுயிர்க் குயிராய் நின்றும்
> அந்தமெய்ஞ் ஞானங் கல்வி
> யழித்தமைத் திடுவ னல்லாற்
> பகர்ந்திடு புருட ராலே
> நினைத்தவை பலித்திடாவால்!"

* கந்த புராணம்.

ஆகலின், தாங்கள் செய்தனவெல்லா மெங்களுடைய நன்மைக்காகவேயன்றி வேறல்ல !

போஜ:—ஆம் !

எல்லார் செயலு மிறைவ னியற்றுவதே
யல்லா தவரோ ரணுவுமசை யாதெனவு
நில்லா தருளின்றே னிலின் றவன்பாலிற்
செல்லா தெபயது சொரூபமன் செய்கையாதே !

விலா:—(போஜனருகிற்சென்று) ஆர்யபுத்திர! அடியேன் செய்த அபராதங்களையெல்லாம் மநத்தில் வைக்காமல் இப்பேதையை மன்னிக்கவேண்டும் ! (போஜனுடைய பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்தல்)

37364

போஜ:—(விலாஸவதியைத் தூக்கி எழுப்பி) ஆ ! என் பிராணேசுவரீ ! பாவியேன் சிறிதேனு முன்றன் நற்குணங்களை யறியாமல், உனக்குப் பலவிதத்திலும் அபராதியானேன்!

குலதந ரநராஞ்சப் பர்களன்றோ ஜநத்தை!
ஜலஜை வபநநேத்ரி ! மாதவி ! என்னை ரக்ஷிப்பாய் !
தலையிலணிவதே தான் லோகமெங்கும் ப்ரஸித்தம்,
மலரதனையுதைத்துத் தள்ளுவாரெங்கு முண்டோ ?

விலா:—(ஸாத்வஸ ஸந்தோஷத்துடன்) ஆர்யபுத்திர ! இப்பிரியவசநங்களுக்கு யான் அர்ஹையாவேனோ ? இன்றன்றோ எனது ஜந்மம் ஸபலமாயிற்று! (இருவரும் ஒருவரையொருவர் தழுவி நிற்றல்)

கோவி — } (வாழ்த்திக்கொண்டு)
ஸோம — }

ஜய ! ஜய !! ஜய !!! போஜ ! ஜய ! விஜயீ பவ !

ஸுந்தரி:—(வாழ்த்திக்கொண்டு)

ஜய ! விலாஸவதீ ஸமேதனாக !

**ஹரி :—**
**காளி :—** (வாழ்த்திக்கொண்டு)

ஜயமுடன் லக்ஷ்மியொடு நாராயணன்போல
நாளுமே மனையுடன் நிலைத்து நிற்க !

**புத்தி.—**(வாழ்த்திக்கொண்டு)

பாபமகிலத்தையும் போக்கி நீ யாவர்க்கும்
பத்துமிந்திரனேபோல வாழ்ந்திருக்க !

**சசி :—**
**சாரு :—** (வாழ்த்திக்கொண்டு)

தயையுடனெவரையுந் தன்போல் நினைந்து நீ
தரையொரு குடைக்கீழ் தாங்கியாள்க !

**போஜ —**(வணக்கத்துடன்)

ஆசிகொடுப்பவரே மொழிக்கும் கடந்தனர் ?
அருமையாரவர்கள் அங்கள் வந்தாலுநன்ல !

**விலா :—**(நமஸ்கரித்து)

ஹேதுவன்றிய மேவலையும் பாதுகாத்தல்
ஈசனடியார்களெல்லார்க்குமியல்பன்றோ ?

**(நேபத்தியத்திற்குள் சங்கத்வானம்.)**

**காளி :—**(செவிகொடுத்து) அடிகாள் ! கேட்டீர்களோ சங்கத்துவனியை. பகைவனது சைநிகர்களுக்கு யுத்தந் தொடங்க ஆஞ்ஞை கொடுக்கப்பட்டதுபோலும் ! நாம் இனி ஒரு நிமிஷமேனுந் தாமதிக்காமல் சிபிரஞ் செல்லவேண்டும் !

**ஹரி :—**என்ன! முஞ்ஜன் இவ்வளவு சீக்கிரத்தில் வந்துவிட்டனனோ இந்நகர்க்கு ?

**புத்தி** :—வந்து மூன்றுநாட்களாயின ! அவனது காரியங்களை லேசாக நினைக்கவேண்டாம் ! தன்னுடன் ஐந்து பேரிருந்தாலும் அஞ்சாமல் நின்று யுத்தஞ்செய்யத் துணிந்தவன் !

**சாரு** :—எமது ஸேனைகள் யாவும் பூபாளநாட்டினின்றும் வந்துவிட்டனவோ ?

**புத்தி** :—இன்று காலையிலேதான் வந்துசேர்ந்தன ! ஆயினும் ஸ்ரீ ஆதித்தியவர்ம மஹாராஜருடைய பேருதவியால் ஸகலரும் யுத்தத்திற்கு ஸந்நத்தராகவே யிருக்கின்றனர் ! நமது போஜன் இருக்குமிடங்கூட தெரியவில்லையே யென்றுமாத்திரம் வருந்தங்கொண்டிருந்தோம்! அவ்வருத்தத்தையும் ஈசன் இப்பொழுது நீக்கிவிட்டனர். இனி நமக்கு ஜய முண்டாகுமென்பதற்கு ஸந்தேஹமில்லை.

**போஜ** :—அடிகாள் ! தாங்கள் எல்லோரும் இவ்வடியேனுக்குச் செய்யும் பேருதவிக்கு யான் என்ன கைம்மாறு செய்யப்போகின்றேன் ! நீங்கள் செய்த நன்மை மேகம் உலகத்திற்குச் செய்வதைப்போன்றது !

(நேபத்தியத்திற்குள் மறுபடியும் சங்கத்துவநி)

**காளி** :—அடிகாள் ! நாமினித் தாமதிக்கலாகாது ! சங்கநாதம் திக்குகளெல்லாம் நடுநடுங்கும்படி வியாபித்துவிட்டது! சத்துருவின் ஸைந்நியம் கிளம்பிவிட்டதுபோற் றோற்றுகின்றது.

**புத்தி** :—ஆம் ! அப்படித்தானிருக்கவேண்டும் ! (ஹரிஹரரை நோக்கி) ஹரிஹரரே ! தாங்கள், தேவிமார்களையும் போஜனையு மழைத்துக்கொண்டு நாம் இறங்கியிருக்கும் விடுதியரண்மனைக்குடனே செல்லுங்கள் ! நாங்களிருவரும் இப்படியே ஸேநாநிவேசத்திற்குச் சென்று, தகுந்த ஏற்பாடுகளெல்லாஞ் செய்துவிட்டுச் சீக்கிரத்தில் வந்து சேருகின்றோம் !

**போஜ** :—அடிகாள் ! நானுந் தங்களுடன் வருகின்றேன் ! இவர்கள் மாத்திரஞ் செல்லட்டும் !

**புத்தி** :—அரசே! நீ இப்பொழுது மிகவுங் களைத்திருக்கின்றனை! அரண்மனைக்குட் சென்று சற்று விச்ரமித்துக் கொள்! நாங்களுமதற்குள் வந்துவிடுகின்றோம்! (நிஷ்கிரமித்தல்)

**சசி** :—சரி! அப்படியே செய்வோம்! (கோவிந்தபண்டிதரை நோக்கி) கோவிந்தபண்டிதரே! தாமும் இப்பிராமணோத்தமரும் செய்த இவ்வுபகாரத்திற்கு நாங்கள் என்ன பிரதி செய்யப்போகின்றோம்! ஆயினுமிச்சமயத்தில் நீவிர் இருவரும் இதையநுக்கிரஹிக்கவேண்டும்! (இருவருக்குமிரண்டை நிறைய நாணயங்களை யளித்தல்)

**பிராமணர்** :- தேவி! இவையெலாமெதற்கு? (பெற்றுக்கொண்டு) தங்களுடைய கிருபையிருந்தாற் போதும். உங்கள் செல்வன் சீக்கிரத்திலேயே சக்கிரவர்த்தியாகப்போகின்றான்!

**சாரு** :—எல்லாந் தங்களுடைய ஆசீர்வாதமே!

**போஜ** :—அடிகாள்! நாங்கள் போய்வர விடையளித்தருளுங்கள்!

**பிராமணர்**:—அப்படியே சென்று வெற்றிகொண்டோங்குவாய்!

**ஹரி** :—வெகு நாழிகையாய்விட்டது! சீக்கிரம் அரண்மனைக்குச் செல்லுவோம் வாருங்கள்! (யாவரும் நிஷ்கிரமித்தல்.)

## ஆறும் அங்கம்

முற்றிற்று.





# ஏழாம் அங்கம்.

## முதற்களம்.

இடம் :—உஜ்ஜியினீ நகர் : சிப்ராநதிக்கரையில் முஞ்ஜராஜன் தங்கியிருக்கும் பாசறை.

(அங்கரக்ஷகர்கள் இருவர் இருபுறத்திலுமமர்ந்து நித்திரைசெய்துகொண்டிருக்க முஞ்ஜராஜா ஒரு பயங்கரமான கனவகண்டு மஞ்சத்தினின்றும் அலறி விழுந்துகொண்டபடி பிரவேசித்தல்.)

முஞ்ஜ:—(அங்கங்களெல்லாம் நடுநடுங்க கண்கள் மூடியபடி ஆழ்ந்தகுரலுடன்) ஆ! ஆ!! (ஆவிதளருவதுபோல் அபிநயித்து) அம்மோ! மாள்கின்றேன்! ஐயோ! ஸஹிக்கமுடியாத துர்நாற்றம் பொருந்தியதும், நரகத்தைப்பார்க்கினு மதிபயங்கரமானதும், காளராத்திரியைப் பார்க்கினுங் காரிருள் மூடினதுமானதும் இவ்வகாதமான மலபங்கத்தில் மூழ்கி முடிவெய்துகின்றேன்! ஆ இதனின்றுந் தப்பி எப்படிக்கரையேறுவேன்? (கால்களையுதறிக்கொண்டு) ஐயோ எனது கால்களையொருபெரு முதலை கவ்வுகின்றதே! (நோக்கி) ஆ! இவள் யார்? பார்ப்பதற்கே பயமாயிருக்கின்றனளே! ஐயோ! என்னைக் கழுத்திற் கைபோட்டு எமன்திசையை நோக்கி யிழுக்கின்றனளே! ஹா! (அலறிவிழித்துக்கொண்டு) ஆ இஃதென்ன! யான் இருக்குமிடம் யாதோ? என் தலையை மொட்டையடித்து என்னிடையில் மலினவஸ்திரத்தை யுடுத்தி, மலபங்கத்திற் றள்ளின அம்மஹாவீரன் சென்றனனோ? (மெதுவாய்க் கண்க

லைத் துடைத்துக்கொண்டு சுற்றிலும் நோக்கி) இஃதென்ன! சித்தப்பிரமையோ? அல்லது என் கண்கள்தாம் மாந்தியத்தை யடைந்துவிட்டனவோ? எனது அங்கரக்ஷகர்களல்லவோ இவ்விடத்திற் படுத்துறங்குகின்றனர்? இது நாம் படுத்திருந்த பாசலறை யல்லவா? (யோசித்து) ஒருவேளை யான் கண்டதெல்லாங் கனவோ? (தலையைத் தடவிப்பார்த்துக்கொண்டு) என்ன ஆச்சரியம்! என் சிரமிலிருந்த மயிர்கள் அப்படியே யிருக்கின்றனவே! (இடையைப்பார்த்து) நான் தரித்திருக்கும் வஸ்திரமும் எனது பீதாம்பரமே! சீ! இவையெலாம் கனவாகவே இருக்கவேண்டும்! ஆஹா! என்னகொடிய கனவு! அவையெலா மின்னுமென் முன்னர்நடப்பன போற்றோன்றுகின்றனவே! ஒருவேளை நமது கதி இப்படித்தான் முடியுமோ? அந்தோ! அம்மஹாவீரன் யாவனோ? அர்க்கமண்டலம்போல் ஜ்வலித்துக்கொண்டு, வெண்பட்டுடுத்து, வெண்மாலைசூடி, ஸாந்தரத்திருக்கோலத்துடன் இந்நகரத்து ராஜகுமாரியின் பாணியைப் பிடித்தனனே, அம்மஹா புருஷன் யாவனோ?—சீ! இஃதென்ன! வீணெண்ணங்களெல்லாங் கொள்ளுகின்றேன்! ஒருவேளை அந்தப் போஜன்தான் இப்பதவியை யடைவனோ?—சீ என்ன பைத்தியம்! போஜன் கொலை யுண்டிறந்து எத்தனை நாட்களாயின! அவன் திரும்பி வருவதெங்ஙனம்?—ஆஹா! அக்காட்சியை நினைத்தமாத்திரத்தில் மயிர்க்கூச்செறுகின்றதே! பொழுதுவிடிவதற்கு இன்னுமெவ்வளவு நாழிகை யிருக்கும்? (நோக்கி)

*"ஊழிவெங் கதிரவனுதய முன்னரிற்
தாழியுந் திங்களுமாரப்ப டங்கின;
கோழியு மார்த்தன! குக்கி லார்த்தன!
சூழியிற் புள்ளெலாந் துள்ளி யார்த்தவே!"

* அரிச்சந்திரபுராணம்.

அம்ம! அருணோதயமாகப் போகின்றதே! இன்று காலையிலாயினும் நாம் ஜயமடைவோமா? ஐயோ! அதிகாலையில் ஸ்வப்பநங்கண்டால் அவசியமாய்ப் பலிக்குமென்பார்களே! நமது முடிவு எப்படியிருக்கின்றதோ? நாமும் ஜெயித்து நம் நாடுசெல்வோமா? (தைர்யத்துடன்) ஆஹா! நமது ஸேனைகள் மாத்திரம் முன்போல் நம் பக்ஷத்தில் நிற்பார்களாயின், இவ்வாதித்தியவர்மனைப்போற் பதினாயிரம் ஆதித்தியவர்மர்கள் வந்தெதிர்த்தபோதிலும் அஞ்சேம்! அப்படியிருக்க, அக்கிழப் பிராமணன் வரவழைத்திருக்கும் பூபாள நாட்டுச் சேனைக்கு அஞ்சுவேனோ? ஆயினும் நேற்று மாலையில், நமது பகைவர்களை யெல்லாம் எத்திசையிலும் நிற்கவொட்டாமற் பறக்கடித்து, அவ்வாதித்தியவர்மனையுங் கைப்பிடிப்பாய் பிடித்துக், கைதி செய்து விட்டோமென்று நாம் ஸந்தோஷத்துடன் திரும்புங்காலையில், யானைக்கூட்டத்தின் மத்தியில் ஒரு ஸிம்மக்குட்டி பாய்வதுபோல், திடீரென்று கிளம்பி, ஒரு க்ஷணப்பொழுதில் நமது ஸேனைகள் இருந்தவிடமே தெரியாமலோட்டி, அவ்வாதித்தியவர்மனையும் விடுவித்துக்கொண்டு சென்ற அம்மஹாவீரன் யாவனோ? அவனுக்குத் துணையாய்வந்த வீரர்கள் யாவரோ? அவனைக் கண்டது முதல் எனது ஸைனிகர்கள் சண்டைசெய்யப் பயப்படுகின்றார்களே!

(நேபத்தியத்திற்குள் கலகல சப்தம்.)

முஞ்ஜ :—ஆ ஆ! இஃதென்ன சப்தம்! இந்த அதிகாலையில் இவ்வளவு பெருத்த சப்தம் கேட்பதற்குக் காரணமென்ன?

(பிரவேசித்து.)

பைரவன் :—(பரபரப்புடன்) மகாராசா! நமது சேனைகளெயெல்லாங் கூட்டிக்கிட்டு நம்ப சேனைத்தலைவர் வச்சராசர் எங்கேயோ விரைந்து செல்கின்றாங்க! அவங்கபோகிற வேகத்தையும் ஆடம்பரத்தையும் பார்த்தால் நம்ப பகைவங்களோடே சேர்ந்துகொள்வாங்கபோலிருக்குது! நம்பளைச்சேர்ந்தவங்

சகூட டபந்து மூலைக்குமூலை ஓடுருங்க ! இனிமகாராசா அவங்களின்சித்தம்.

முஞ்ஜ :— (ஆத்மகதமாய்) இதுதானோ இப்பொழுது கிளம்பிய பெருங்கூச்சலுக்குக் காரணம். நல்ல திருச்சட்டும் ! (பிரகாசமாய்) பைரவா ! பத்திரநாராயணரை நாம் ஸேநாதிபதியாய் நியமித்திருப்பதாக அவரிடந் தெரிவித்து, ஸேனைகளை ஓடவொட்டாமல் ஸமாதாநஞ் செய்யச்சொல்லு ! நாமுமிதோ பின்னரே வருகின்றோம்.

பை :—புத்தி மகாராச ! (நிஷ்கிரமித்தல்).

முஞ்ஜ :—ஆ ஆ ! நாம் கனவிற்கண்டது உண்மையாகவே முடியும்போற்றோற்றுகின்றதே ! வத்ஸராஜன் நம்பக்ஷத்தில் இருப்பவன்போல் நடித்து வருகின்றனனென்று நாம் அப்பொழுதே நினைத்தோம் ! என்னவோ அவனது செயல்களை நினைத்துக்கொண்டால். வாராத எண்ணங்களெல்லாம் வருகின்றன? இப்பொழுது செய்யக்கூடிய உபாய மென்னவிருக்கின்றது ?

(வெகு ஸம்ப்ரமத்துடன் பிரவேசித்து)

தநஞ்ஜயர் :—மஹாராஜ ! அடியேங்களைக் காப்பாற்ற வேண்டும் ! (காயத்துடன் ஓடிவந்து மூர்ச்சித்தளரக் கீழேவீழ்தல்.)

முஞ்ஜ :—தநஞ்ஜயரே ! என்ன ஸமாசாரம் ! எனிப்படி அஞ்சிநடுங்குகின்றீர் ? எழுந்திரும் ! எழுந்திரும் !

தந :—மஹாராஜ ! யான் என்னசொல்வேன் ! விலாஸவதீ தேவியாரும் சசிப்ரபா தேவியாரும் சிறைச்சாலையினின்று மெப்படியோ எனக்குத் தெரியாமல் தப்பித்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டனர் ?

முஞ்ஜ :—(திடுக்கிட்டு) ஆ ! என்ன ? விலாஸவதிகூடவா ? அவர்கள் எங்கே சென்றனர்களாம் ?

தந :—சிலர் பூபாள நாட்டிற்குச் சென்றதாகச் சொல்லுகின்றனர்! வேறு சிலர் இவ்வுஜ்ஜயினிநகருக்கே ஹரியநருடன் சென்றதாக உரைக்கின்றனர்?

முஞ்ஜ:—பிறகு இப்பொழுது நாதூநகரை யார் பாதுகாத்து வருகின்றனர்?

தந :—மஹாராஜ! தாங்கள் நகரத்தை விட்டுக்கிளம்பினதும், ஜநங்களெல்லோரும் பெருங்கூட்டங்கூடி, நகரத்தை அல்லோலகல்லோலப்படுத்திக், கோட்டைவாயில், அரண்மனை முதலானவற்றையும் பிடித்துக்கொண்டனர்கள்!

முஞ்ஜ :—(கோபத்துடன்) என்ன? சரி! நீரும் வெளியே செல்லும்! நான் ஒருவனுகவே இன்று நடக்கவேண்டியதைப் பார்த்துக் கொள்ளுகின்றேன். (தநஞ்ஜயர் பயந்து நிஷ்க்கிரமிக்க) ஆ ஆ! புருஷபலத்தினுல் ஆவது ஒன்றுமில்லை! எவ்வளவு வலலமையுள்ளவனு யிருப்பினும் தெய்வபலமில்லாதவன், நாசமடைவது திண்ணம்.

தநபல மிருந்தென்? தைரிய மிருந்தென்?
மநவலி யிருந்தென்? மாட்சிமை யிருந்தென்?
கநமிகு விருந்தென்? காவலி ருந்தென்?
அநக னருளின்றே லழிவரே யாரும்!

ஆ ஆ! நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமென்பார்களே: அது வாஸ்தவமாயிற்று! போஜனைக்கொன்று தாராநாட்டைக் கைப்பற்றியதுமன்றி, விலாஸவதியையும் எவ்விதத்திலாயினும் வஞ்சித்து மறுமணஞ்செய்து கொண்டு பூபாளநாட்டிற்கும் அரசனுகிவிடலாமென்று நினைத்தோமே! அக்கினி எங்ஙன மாசத்தியப்படப்போகின்றது? உள்ளத்தே சோகமூர்ந்து நிலைப்போலிருக்கின்றதே!

பெற்றனைக் கண்டுவந்து
பிழையில் வழியினின்று,
மற்றவர் வாழ்வையெண்ணி
மநத்தினைத் தூயதாக்கி,

அற்றவர்க்குதவிநாளும்
அன்புடை யார்களுக்கே
செற்றமின் மனத்துத்தேவர்
செய்விப்பர் நன்மை யம்ம !

ஆஹா ! இனிநமக்குத் தூரையாயினும் ஸித்திக்குமா ?

உள்ளத்தி லுதிக்குமெண்ணம்
ஒருவனுக் குறுதியாகும்,
உள்ளத்தி லுதிக்குமெண்ணம்
ஒருவனை யொழிப்பதாகும் :
உள்ளத்தினினைவான்மாந்தர்
உய்குவ ரழிவ ரந்தோ :
உள்ளத்தின் றீமையாலே
உலகெலாம் பகையாய்க்கொண்டேன் !

இனி, எதுவரினும் பட்டே தீரவேண்டும்.

(பிரவேசித்து)

மந்திரி நாராயணர் :—(பரபரப்புடன்) மஹாராஜ ! நாம் போய்விட்டோம் !

முஞ்ஜ :—மந்திரி ! என்ன செய்தி ? என்ன செய்தி?

மந்திரி :—மஹாராஜ ! தாங்கள் அவனித்துக் கேட்க வேண்டும் ! நம் ஸேனைத்தலைவர் வத்ஸராஜர் பகைவருடன் சேர்ந்துவிட்டனர் ! நமது ஸேனைகளெல்லாம் பகைவர்களால் நான்கு பக்கங்களிலுஞ் சூழப்பட்டு ஜஞ்ஜாமாருதத்தினால் முறிந்துவீழ்த்தப்பட்ட மரங்கள்போற், சின்னபின்னமாயச்சிதறிப் பறந்துவிட்டன ! நான் பிழைத்துத் தங்களிடம் வந்ததே அஸாத்தியமாய்விட்டது. தாங்களே நேரே வந்து தைரியஞ்சொல்லினால் ஒருவேளை மிகுந்துள்ள ஸேனைகளை ஓடாமல் நிற்கச் செய்யலாம்.

(போஜன் மாறு வேஷத்துடன் ஓர் பரதேசியைப்போல் பிரவேசித்தல்.)

**முஞ்ஜ** :—மந்திரீ ! நீ சீக்கிரஞ் சென்று நாம் வருவதாகச் சொல்லி, சேனைகளை திருப்படி செய் ! ஆதித்தியவர்மனையும் அக்கிழவனையும் இனிக் கொல்லாமல் விடுவதில்லை ! (பத்திர நாராயணர் நிஷ்கிரமிக்க) ஆ ஆ ! என்னபுத்திஹீனனானேன் ! வத்ஸராஜனுடைய வார்த்தையை நம்பி யன்றோ இவ்வாதித்தியவர்மனை யெதிர்க்கத் துணிந்தேன்! அவன் நம்மை ஸமயத்திற் கைவிடுவனென்று கனவிலும் நினைக்கவில்லையே! நாம் செய்த மோசம் நமக்கே வாய்த்தது போலும்? நான் பிறருக்கு இட்டதைப் பிறர் எனக்கிடுகின்றனர்.

* "சூழல் சகடக்கால் போலுந்
தோன்றியே யழிமின் போலும்,
பாழுன் மநவேசை போலும்
பருதிதி மேவி நீங்கும்,
பழமைபோ லதனை நம்பிப்
பழியுறச் செருக்கன் மேக
நிழலினை நம்பினைக் கொ
ணொடுங் குடை நீத்தலைப்போ ! "

ஆகலின், இனி நாம் பகைவரை வெல்வதெங்ஙனம் ? நாமெங்கேயாகினுஞ் செல்வோமா ?

† "இலை தளர்ந்திட்டபோது நீணிலத்துறவுமில்லை,
ஜலமிருந்தகன்றபோது தாமரைக் கருக்கன் கூற்றம்;
பலவந மெரியும்போது பற்றுந்திக் குதவுங்காற்று,
மெலிவலிவிளக்கேயாகில் மீண்டுமக் காற்றேகூற்றாம்"

சீ ! நாமிதுகாறும், சுத்த வீரனென்று உலகெலாம் பெயர் பெற்று, இப்பொழுது இவ்வழிவுடலுக்குப் பயந்து பின்வாங்கு

* நீதிநூல். † விவேகசிந்தாமணி.

வோமாகில் ந மைபாற்றரசர்கள் என்ன சினையார்கள்? பின்பு நமது சொந்தநாடாகிய தாரைதான் நமக்கு நிலைக்குமோ?— மேலும் எப்படி நாம் தப்பித்துச் செல்வது? பகைவர்கையில கப்பட்டுத் தவிப்பதைவிட நேரே யவர்களுடன் யுத்தஞ்செய்து கையுங்கத்தியுமாய் மடிவதே மேன்மை! எதற்கும் போர்க்கோலம் பூண்டு வெளியிற் செல்வோம்? (நாலுகடி பரிக்கிரமித்து, நோக்கி) அந்தோ! இஃதென்ன என் முன் நிற்கின்றதே!

போஜர் :—(மறைந்து நின்றபடி) ஆஹா! என்ன வஞ்சனை! எவ்வளவு துரோஹம்!

முஞ்ஜ :—(உற்றுநோக்கி, அச்சங்கொண்டு) ஆ ஆ! இஃதென்ன? நாம் காண்பது கனவோ? அந்தோ! போஜனுடைய குரல்போலவேயிருக்கின்றதே! ஒருவேளை நான் தொலைப்பித்த அவனது ஆவிதான் இவ்வுருவங்கொண்டு வந்திருக்கின்றதோ?

போஜ :—ஆ! சிற்றப்பா! என்னைக் கொல்லப் பார்த்ததுமன்றிப் பேதையான விலாஸவதியையும் கெடுக்கப் பார்த்தனையே!

முஞ்ஜ :—(தலைகுனிந்தபடி நடுக்கங்கொண்டு ஆச்சரியமாய்) ஐயோ! இஃது போஜனது உருவமே! (பிரகாசமாய்) குமார! உன்னை வேண்டிக்கொள்கின்றேன்! என் முன்னில்லாமல் விலகிச்செல்!

போஜ :—“கெடுவான் கேடு நினைப்பான்” என்பதையறியாயோ?

மண்ணினிற் பெண்ணிற் பொன்னின்
மாறலில்லாசை கொண்டார்,
கண்ணினை யிழந்தாராகிக்
கடுவழிச் சென்றுகேட்டே,

' புண்ணுறு மநத்தராகிப்
புலம்பியே யவழிவரிங்கும்
பண்ணிய் மூன்றிற்றிங்கு
பட்டழிவுறுவாய் மூட. !

**முஞ்ஜ** :—(கைகளைக்கூப்பி) ஐயோ ! உன்னை வேண்டிக் கொள்கின்றேனே! என்னை வருத்தாமல் விட்டகலேன் ! (செவிகொடுத்து) ஆ ! இஃதென்ன? திடீரென்று சங்கநாதவனியும் கேட்கின்றது ! பகைவர்களுமிச்சமயத்தில் என்னைச் சூழ்ந்து கொண்டனர்களோ ?

**போஜ** :—ஆ ஆ ! இதுதான் உன்செய்கைகளுக்கு நீ யடைந்த பயன் போலும் ?

* "தாயநீக்குமிழி யதிலுறு மின்பங்
காணலிற் புனலிது புனக்கிங்
காயவித்துயர மளவிலே யிதை நீ
யாய்வுறாமை மையினு லழிந்தற்றாய் !
நீ யினிக்கவலை நினைவெலா மொழித்து
நேயமாய் வந்தெனக் குடன்பட்
டாய நற்சொரூபற் கன்பதே யிசைந்தா
லரியதேதார் நமக் கெதிரே !"

(பிரவேசித்து)

**பைரவன்** :—(பரபரப்புடன்) இதோ தம்மைக் கையும் பிடியுமா கொண்டுபோவதற்கு ஆதித்தியவர்ம மஹாராஜாவே பெருத்த சைந்நியத்துடன் வருகிறார்க !

**முஞ்ஜ** :—ஆ ! இவன் கையிலும் யான் உயிருடன் அகப்படவேணு ? இவன் வருவதற்கு முன்னரே நானே இக்கரவாளத்தினுற் குததிக்கொண்டிறக்கின்றேன் ! (குத்திக்கொண்டு கீழே வீழ்தல்).

---

* ஜாக்கிரட்டு

போஜ :—(பரபரப்புடன்) ஆ! நில்லும்! நில்லும்!! அவஸரப்படாதீர்! அவஸரப்படாதீர்!! (அருகிற் சென்று, தான் போர்த்திருந்த மாறு உடைய எறிந்துவிட்டு) ஆ! சிற்றப்ப! சிற்றப்ப! யான் இருக்கும்பொழுது தாமொன்றுக்கும் பயப்படவேண்டியதில்லையே.

முஞ்ஜ:—(நோக்கி) ஆ! இஃதென்ன! நிச்சயமாய்ப் போஜனே! (கண்ணீர் சொரிய) குமார! குமார!! நீ உயிருடனிருக்கின்றனையோ?

போஜ:—எந்தையே! யான் கொலையுண்டிறக்கவில்லை! உம்மைக்காப்பாற்றுவதற்கு யான் எப்பொழுதும் ஸந்நத்தனாகவே யிருக்கின்றேன்!

முஞ்ஜ :—ஆ! குமார! இனி என்னைக் காப்பாற்றுவது எங்ஙனம்?

*"அவரவர் வினையி னவரவர் வருவா
ரவரவர் வினையள வுக்கே,
அவரவர் போக மென்றதே யாயி
னருக்கார் துணையதா குவர்கள்?
அவரவர் தேற முளபொழு துடனே
யாதர வாரென நாடி,
அவரவ ரடைந்த னெறிகன்மத் தடையு
மாதர வாதர வாமோ?"

இதோ யான் புரிந்த கொடுந்தொழிலின் பயனை க்ஷணத்தில் அநுபவிக்கப்போகின்றேன்! இதோ என் பிராணன் வெளியிற் புறப்பட்டுவிட்டது பார்!

*"கொலைகளவு காமாதி
கொடுநரகத் தீச்சூழ்ந்து
நிலைகலங்கி மரம்புழுங்கி
நெறியொதுங்கி நின்றேனைக்

* குமாரதேவர்:

கலையுணர்வி ஞஞ்சாந்திக்
கடலாடச் சுகந்த
மலைவோட வைந்தவடி
மாண்பதனை மறப்பதுவோ :"

**போஜ :**—(நோக்கி) ஆ! ஸாஹஸம்! ஸாஹஸம்!!

**முஞ்ஜ :**—குமார! யான் உனக்குப் பலவிதத்திலுந் தீங்குகளிழைத்தேன்! அவற்றை மறந்து என்னை மன்னிப்பாய்!

(போஜனது காலை வணக்கமாய்ப் படித்துக்கொண்டு)

"பித்தனெனத் தீமை
பிதற்றிய தென்றனக்கேதாறும்
உத்தமனே! என்னுடைய
உள்ள முருகுதடா!
இப்பாவி நெஞ்சால்
இழுக்கிழைத்த தெங்கநனை
அப்பா! நினைக்கினெனக்
கஞ்சும் கலங்குதடா!

பொருந்துகின்ற வஞ்சப்
புதுமையெண்ணி யெண்ணியையோ
வருந்துகின்ற தோறுமுள்ளே
வாளிட் டருக்குதடா!
ஊனமிலா நின்னை
உரைத்தகொடுஞ் சொல்லையெலாம்
ஞானமிலே னெண்ணுந்தோறு
நாடி நடுங்குதடா!

இனியேது செய்வேன்
இகழ்ந்துரைத்த சொல்லை
தனியே நினைந்திடினுந்
தாது கலங்குதடா!

வெந்நரகில் வீழும்
வினைவால் விளம்பியதை
என்னரசே! என்றுதொறு
மென்னை விழுங்குதடா!

ஆவ தறியா
தடியே னிழைத்தகொடும்
பாவ நினைக்கில
பகீரென் றலைக்குதடா!'

போஜ:—அதனாலென்ன! தமது கட்டளைப்படி இப்பொழுதும் நடக்கக் காத்துக்கொண்டிருக்கின்றேன்!

முஞ்ஜ:—(கண்ணீர்சொரிய போஜனை இரண்டு கைகளாலும் மார்புடனணைத்துக்கொண்டு) என் செல்வனே! இனி எனக்குவேண்டியது மிருக்கின்றதோ? இதோ பார்! என் கண்கள் இருள் மூடிவிட்டன! இந்திரியங்கள் வலிவற்றுப் போயின! நினைவு தடுமாற்றங்கொள்கின்றது! ஹ்ருதயம் சூந்யமாய்விட்டது! இதோ மாள்கின்றேன்!

*"எடுத்தமா ஜந்மம் பாழி
லேகுதற் கஞ்சா ரஞ்சி
யடுத்தவர்க் கருளா ரச்ச
மாடுவர் பொருட்டைக் கொண்டே
யுடுப்பது முண்பதும்பின்
னுறங்கலுந் தவமாய்த் தர்க்கந்
தொடுப்பதி னுட்க ழிக்குந்
துஷ்டருக் கஞ்ச மாறே!"

போஜ:—எந்தையே! ஆற்றுதலடைவீர்! ஆற்றுதலடைவீர்!!

* அஜ்ஞானசந்த்ர தீபிகை.

முஞ்ஜ :—இனி ஆற்றுதலடைவதெங்ஙனம்? என்னை யற்றபின்னர் தீபத்தின் ஒளி முன்போலத் திகழுமோ? நதியின் வேகம் தன் கரையினையே கரைப்பதுபோல் நான் செய்த துஷ்க்ருத்தியமே என்னைக் கரைத்தழிக்கின்றது! ஆ! என்னருமைச்செல்வனே! நீ என்னை மன்னிக்காவிடில் நான் நற்கதி பெறேன். ஆ! இப்பொழுதே சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவைகளில் ஒன்றையு முணர்கிலேன். ஆ! மாள்கின்றேன்! மாள்கின்றேன்!!

*"கலைமுடிவு கண்டறியேன்,
கரையிலா மடம்பூண்டேன்,
கதியறியேன், கதியறிந்த
கருத்தர்களை யறியேன்,
கொலைபுலைகள் விடுத்தறியேன்,
கோபமுந் தறியேன்,
கொடுங்காமக் கடல்கடக்குங்
குறிப்பறியேன், குணமா
மலைமிசையின் மிசையறியேன்,
பெருங்காமம் புரியும்
மனிடர்தங் கடையுடையும்
வழியுமறி வேனோ?
இலையெனுமிவ் வுலகினிடை
யெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்னசெய்வேன்
ஏதுமறிந் திலனே!"

"வாதமே புரிவேன்! கொடும்புலி யனையேன்!
வஞ்சக மனத்தினேன்! பொல்லா
வாதமே யுடையேன்! என்செய்வேன்? என்னை
என்செய்தாற் றிருவோ வறியேன்!

* திருவருட்பா.

போதமே! ஐந்தாம் பூதமே! ஒழியாப்
புநிதமே! பதுமனைப் பூவே!
பாதமே சரணம் சரணமென் றன்னை
பாதுகளிப்பதுன் பரமே."

(கீழே வீழ்ந்து மரணபாதையை யபிநயித்தல்).

**போஜ** :—ஆ! கஷ்டம்! கஷ்டம்!

பேதை நீ மண்ணைப் பெண்ணைப்
பெற்றுடல் களிக்க நாடி,
ஏதையு மென்னுயாகி
யிழைக்கை பல்வினை கூர்ந்தோ!
ஓதினாய்! உணர்ந்தாய்! சால
உலகெலாந் தூற்ற நின்றாய்!
சோதிநீருள்ள மிங்குக்
குலேவின் வாழ்ந்ததுண்டோ!

**பைர** :—ஹா! ஹா! (அழுதல்).

**போஜ** :—ஆ! ஈசா! உனது செயலை யான் என் சொல்வேன்! (கண்ணீர் சொரிய)

* "தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற
சுடரே! தொடக்கறுத்தோர் சுற்றமே! பற்றி
நீந்த வரிய நெடுங்கருணைக் கெல்லா
நிலயமே! வேத நெறிமுறையி னோடி
யாய்ந்த வுணர்வி னுணர்வே! பகையா
லலைப்புண் டடியேம் அடிபோற்ற வந்து
ஈந்த வரமுதவ வெய்தினையே யெந்தாய்!
இருநிலத்தவோ நின் னிணையடித் தாமரைதாம்!"

(போஜன் மூர்ச்சித்து வீழத் திரை வீழ்தல்.)

* இராமாயணம்.



15.] முஞ்ஜ ராஜருடைய பாசறை. [௩௬௫.

## இரண்டாங்களம்.

இடம்:—உஜ்ஜயிநீ நகர் : ஆதித்தியவர்ம மஹாராஜருடைய ஆஸ்தாந மண்டபம்.

(விக்ரமாஸநத்தினிருபுறத்திலும் இரண்டு ஸேவகர்கள் வெள்ளித்தடிபிடித்து நிற்க, இரண்டு யவநிகள் வெண்சாமரை வீச, மந்திரி ஸுகேசர் முதலிய சில ஆஸ்தாநிகருடன் ஆதித்தியவர்ம மஹாராஜர் பத்மாவதீ தேவியாருடன் விக்ரமாஸநத்தில் வீற்றிருந்தபடி பிரவேசித்தல்.)

ஆதி :—மந்திரீ ! அன்று நம்மைப் பகைவர்கையினின்றும் போர்க்களத்திற் காப்பாற்றிய அம்மஹாவீரர்களிருவரையும் அழைத்துவரச் சென்றனர்களோ ? போஜகுமாரரும் அவரைச் சேர்ந்தவர்களுடன் இப்பொழுது நம்மைக்கண்டு விடைபெற்றுச்செல்வதற்காக வருவதாய்த்தெரியப்படுத்தினர். நாம் அவர்களுக்குத் தக்கபடி மரியாதை செய்து வழியனுப்பல் வேண்டுமென்றே ?

ஸுகேசர்:—மஹாராஜ ! அவர்களை யழைத்துவருவதற்காக நமது ஸேனைத்தலைவர் வீரஸேநரே சென்றிருக்கின்றனர்: இன்னுஞ் சிறிது நேரத்திற்குள் அவர்கள் இங்கே வருவார்களென்று நினைக்கின்றேன். போஜகுமாரரை நானே எதிர்கொண்டு சென்று மரியாதைகள் செய்து அழைத்து வருகின்றேன் ! (நிஷ்கிரமித்தல்)

ஆதி :—ஈசனது கிருபையால் எல்லாம் நன்றாய் முடிந்தன ! அக்கொலைப்பாதகன் முஞ்ஜராஜனுந் தான் செய்த கொடுந்தொழிலுக்குத் தக்கபடி தானே குத்திக்கொண்டு இறந்தனன்! நமதுபிரியநண்பராகிய ஸ்ரீ ஸிந்துலமஹாராஜருடைய புதல்வர் போஜகுமாரரும், பலவித ஆபத்துக்களினின்றுந் தப்பித் தமது பந்துமித்திரர்களுடன் சேர்ந்தனர்! ஆஹா! அவ

ருடைய பராக்கிரமத்தை யான் என் சொல்வேன்! நானும், அவ்வீரர்கள் இருவரும், அப்பாதகன் முஞ்ஜனது கபடத்தால் திடீரென்று கையும் பிடியுமாய் அகப்பட்டுக்கொண்டு சத்துரு சிபிரத்திற்குக் கொண்டுபோகப்படும் ஸமயத்தில் எங்கேயிருந்தோ பேற்றுருவங்கொண்ட தேவஸேநாபதிபோல் விரைந்தோடிவந்து, என்னையும் அவ்வீரர்களையும் க்ஷணத்தில் விடுவித்து, அப்பாதகனையுந் தலைகாட்டவொட்டாமல் ஓடச்செய்தனரன்றோ அம்மறைவீரர்?—ஆஹா! இந்த ஸமயத்தில் நமது கண்மணி லீலாவதி யிருந்திருப்பாளாயின், அவனுக்கே அவளை மணஞ்செய்துகொடுத்து, இவ்விராஜ்ஜியத்தையுமவர்களுக்குத்தந்து யான் பேரானந்தமடைவேனே!

பத்மா:—பிராணேசுவரா! நேற்று நாம் சசிப்ரபா தேவியாரையும் சாருமதி தேவியாரையுங் காண்பதற்காகப் போனபொழுது, வழியில் இருவரைத்தாங்கள் காண்பித்தீர்களே; அவர்கள்தாமோ அம்மறைவீரர்கள்?

ஆதி:—ஆம்! ஆம்! அவர்களே!

பத்மா:—அவர்களில், அச்சிறுவனைப் பார்த்தீர்களோ? அவனைக் கண்டதுமுதல் என்மனத்தில் தோன்றாத எண்ணங்களெல்லாந் தோன்றுகின்றன. அவனைப்பார்த்ததும் நமது கண்மணி லீலாவதியைக் கண்டதுபோலிருந்தது!—(கண்ணீர் சொரிய) அச்செல்வியையும் நாம் காணப்போகின்றோமா?

ஆதி:—ஆம்! எனக்கும் அவர்களைக் கண்டதுமுதல் அச்சிறுவனிடத்தில் ஸொந்தப்பிள்ளையினிடத்திற்போல அளவுக்கடங்காத அன்பு உண்டாயிருக்கின்றது. ஆயினும், நமக்கினி அப்படிப்பட்ட பெண்மணியுங் கிடைக்கப்போகின்றனளா? நெடுநாள் வரைக்கும் மக்களில்லாது வருந்தினோம்! ஏதோ ஸ்ரீ காலப்பிரியநாதருடைய அநுக்கிரஹத்தாற் புத்திரனில்லாவிடினும் வரதாரத்தினமாகிய லீலாவதியைப் புதல்வியாயடைந்தோம். மக்களில்லா வருத்தத்தையும் சிலநாள் மறந்தோம்.

பூண்டோம் இவ்வுஜ்ஜயிநீ ராஜ்யாதிபத்யத்தை. ஆண்டோம் குறைவின்றி யநேக வருஷம்! கொண்டோம் திக்கெலாம் வெற்றியை! கண்டோம் ஸகல ஸுகங்களையும்! இவற்றை யெல்லாம் நினைப்பதிற் பயனென்னே? நமது கண்மணியை நாம் உயிருடன் பறிகொடுத்துப் பன்னிரண்டு வருஷங்களா யினவே! இன்னுமவளது செய்தி ஏதும் தெரியவில்லையே! இப்பொழுது அவள் உயிருடனிருப்பின், பதினாறுவயதுள்ள திவ்ய யுவதியாய் விவாஹோசிதையாய் விளங்குவளன்றோ? அவள் கிடைப்பின் நமக்கு நிகர் யார்?

**பத்மா:—** பிராணநாத! நினைக்க நினைக்க, நக்கண்மணி உயிருடனிருப்பாளென்றே தோன்றுகின்றது!

**ஆதி:—** ஸ்ரீதேவியே யுருவெடுத்து வந்தாற்போலிருந்த அப்பெண்மணியைக் கண்டாயினும் யாம் உயர்நலம் பெறலா மென்றெண்ணி யிருந்தோமே! அவளைப்பறிகொடுத்தும், நாம் இவ்விராஜ்ஜியஸுகத்தை யநுபவித்திருக்க வேண்டுமோ? மேகத்திற்றோன்றும மின்னலைப்போல் க்ஷணபங்குரயான சிற் றின்பங்களை யநுபவித்தோமேயன்றி, பரத்திற்கு ஸாதகயான ஒரு நற்றவத்தையும் யாம் புரிந்திலோமே!

> மக்கள் யாவரு மொக்கவே யடையும்
> இறப்பெனு முண்மையை மறப்ப ராயின்,
> கேடுவே றுண்டோ? விடுபேற் றிற்குத்
> துறப்பெனுந் தெப்பந் துணைசெய் யாவிடில்,
> பிறப்புப் பெருங்கடல் கடக்க லாகுமோ?
> ஏரந நெறியிற் போனவ ரன்றியும்
> செல்வம் நீக்கிய செல்வ ரன்றியும்
> யாவ ருயர்ந்த தேவநா டடைந்தார்?

(பிரவேசிந்து).

ஒரு ஸேவகன்:—மஹாராஜா! நமது ஸேனைத்தலைவர் யாரோ இரண்டுபேரை யழைத்துவந்திருக்கிறார்! உள்ளேவர உத்தரவு கேட்டுவரச்சொன்னார்.

ஆதி:—உடனே சென்று வரச்சொல்! (ஸேவகன் நிஷ்கிரமிக்க) பிராணேசுவரி! இவர்கள் தாம் நம்மை முதன் முதலிற் காப்பாற்றவந்த வீரர்களாயிருத்தல்வேண்டும்.

(ஜயபாலனும், புருஷவேஷத்துடனிருக்கும் லீலாவதியும், வீரஸேநரை முன்னிட்டுக்கொண்டு பிரவேசித்தல்.)

ஆதி:—(எழுந்து) வாருங்கள் எமது பிரியநண்பர்காள்! இவ்வாஸநத்தில் வீற்றிருங்கள்! உங்களது உதவியாற்றான் யாம் அன்று பிழைத்தோம்! நீவிர்செய்த பேருதவிக்கு யாம் என்ன கைம்மாறு செய்யப்போகின்றோம்? இவ்விராஜ்ஜியத்தையே தங்களுக்குப் பரிசாய்க்கொடுத்தாலும் போதாதே!

ஜய:—மஹாராஜ! இத்தனை மரியாதையுந் தாங்கள் புரிய நாங்கள் யாதோருதவியுஞ் செய்யவில்லையே! அப்போஜகுமாரராலேதான் நாமெல்லோரும் உயிர்கொண்டு மீண்டோம். அம்மஹா வீரரையழைத்து, அவருக்குச் செய்யுங்கள் இம்மரியாதைகளை யெல்லாம.

லீலா:—(ஜநாந்திகமாய்) எந்தாய்! இவர்தாமோ ஆதித்தியவர்ம மஹாராஜர்?

ஜய:—(ஜநாந்திகமாய்)ஆம்! குழந்தாய்!

லீலா:—(ஆத்மகதமாய்) ஆஹா! இவரைப்பார்க்கும் பொழுதே என்மநத்தில் இவரிடத்திலோர் அதிசயமான பக்தியுண்டாகின்றதே!

ஆதி:-(ஜயபாலனை நோக்கி) இச்சிறுவன் தமக்கு என்ன ஆகவேண்டுமோ? இவனது செயலைக்கண்டு மிகவும் இவனை கொண்டாடுகின்றோம்.

ஜய:—மஹாராஜ! இச்சிறுவன் நம் புதல்வரிலொருவன். தமக்கே யவனைப் பரிசளிக்க அழைத்துவந்தேன். இவனால் தமக்குப் பிரியமுண்டாகுமென்பதில் ஸந்தேஹமில்லை.

லீலா:—வந்தனம்! (ஆதித்தியவர்ம மஹாராஜனை வணக்குதல்)

ஆதி:—(ஆத்மகதமாய்) ஆஹா! இவனது குரலும் நம் கண்மணி லீலாவதியின் குரலையொத்திருக்கின்றதே! என்ன விநயம்! என்ன பொறுமை! (பிரகாசமாய்) பாலகா! நீ இன்றுமுதல் எம்மையும் ஒரு தந்தையாக நினைக்கவேண்டும்!

லீலா:—மஹாப்பிரஸாதம்!

(பிரவேசித்து)

ஸேநேசர்:—மஹாராஜ! அவர்களெல்லோரும் நம்மரண்மனைத் தலைவாயிலில் வந்திருக்கின்றனர்! உள்ளேயழைத்துவரலாமோ?

ஆதி:—மந்திரி! அதற்கென்ன தடை! சீக்கிரஞ்சென்று அழைத்துவாரும்.

ஸேநே:—அப்படியே! (நிஷ்கிரமித்தல்.)

ஆதி:—(ஜநாந்திகமாய்) எனது பிரியநாயகி! ஜகதீசனது கிருபையால் ஸகலமும் மங்களமாய் அமைந்தன! நமக்கு இந்த யுத்தத்தில் இவ்வளவு பெருமையும் வெற்றியும் ஆக்கிய அம்மஹாவீரனுச்கு நாம் என்ன கைம்மாறு செய்யப்போகின்றோம்?

பத்மா:—(லீலாவதியைப் பார்த்துக்கொண்டே ஜநாந்திகமாய்) ஆஹா! இந்தஸமயத்தில் நமது லீலாவதி கிடைப்பாளாயின், அவளை யவருக்கே மணஞ்செய்துகொடுத்து, இந்த நாட்டையுமவர்களுக்குக் கொடுத்துவிடலாமே.

(நேபத்தியத்திற்குள் மூராஜகோஷம் முழங்குதல்)

ஆதி:—இதோ அவர்களும் வருகின்றார்கள்! (எழுந்திருத்தல்)

(போஜன், காளிதாஸன், புத்திஸாகரர், வத்ஸராஜர், ஹரிஹரர், கோவிந்தபண்டிதர், ஆகிய ஆறுபேரும் ஸூதேசரை முன்னிட்டுக்கொண்டு பிரவேசித்தல்)

ஸபையோர்:—(எழுந்து நின்று) ஜய! ஜய! விஜயீபவ!

ஆதி:—(எதிர்கொண்டுசென்று) போஜகுமாரரே வாரும்! எம்முயிரைக் காப்பாற்றிய வீரசிரோமணியே வாரும்! வாரும் காளிதாஸரே! வாரும் எமது பிரிய நண்பராகிய புத்திஸாகரரே! எல்லோரும் வருக, வருக! உங்களது உதவியாலேதான் எமது கீர்த்தியும், இராஜ்ஜியமும் நிலைத்தன! யாவரும் இங்கு விஜயஞ்செய்யவேண்டும்! (யாவரும் ஆதித்தியவர்மாவை வணங்கி யுட்காருதல்)

போஜ:—மஹாராஜா! நாங்கள் என்ன உதவிசெய்தோம்? தம்முடைய பேருதவியினாலேதான் நாங்கள் இப்பதவியை யடைந்தோம்.

ஆதி:—இராஜகுமார! உன் விநயமே எம்மைப் பரவசப்படுத்துகின்றது. இனி இவ்விராஜ்ஜியமு முன்னுடையதே!

போஜ:—மஹாராஜா! யான் இவ்வளவு மரியாதைக்கு அர்ஹனல்லேன்! வேண்டுமாயின் பரமோபகாரியான இப்பிராம்மணோத்தமருக்குச் செய்யுங்கள் இம்மரியாதைகளையெல்லாம்.

கோவிந்த:—இராஜகுமார! என்னைப்போன்ற ஏழைகளுக்கு இம்மரியாதைகள் தகுமா? நீ இவைகளை யெல்லாம் பெற்றுச் சக்கிரவர்த்தியாகிப் பிரஜைகளைப் பாதுகாத்துவந்தால். அதுவே எனக்கு ஸகல ஸாம்ராஜ்யமுங்கிடைத்ததுபோலாகும்.

ஜய :—மஹாராஜ ! என்னை மன்னித்து, யான் கூறு வற்றைச் சிறிது கருத்தோடுங் கேட்கவேண்டும். யான் தமக்குமாத்திரமன்று, இவ்விராஜகுமாரருக்கும் பெருந்தீங்கி ழைத்துவிட்டேன்.

ஆதி :—இஃது விந்தையினும் விந்தையே !

போஜ:—(ஜயபாலனை நோக்கி ஆத்மகதமாய்) ஆ ! இஃ தென்ன ! இவனன்றோ அப்பில்லராஜன் ! இச்சிறுவன் யாவ னோ ? இவனைப் பார்க்கும்பொழுது என்னுயிர்க்காதலி லீலா வதியின் ஞாபகம் வருகின்றதே !

ஜய :—இல்லை ! மஹாராஜ ! என் மதியீனத்தினால்தமக் கும் இவ்விராஜகுமாரருக்கும் மறைத்தான அபராதத்தைப் புரிந்துவிட்டேன் !

இரக்கமுளங் கொள்ளாம
　விச்சிறுவ னெடுங் கடக்கும்
அரசே ! யான் செய்தவப
　ராதத்தை யென்சொல்வேன் !
புரிந்தபிழை பொறுத்தெனக்குப்
　போதித்து நல்வழியைக்
கருணையுட னடியேனைக்
　காப்பதினி நும்பாரம்.

ஆதி :—நீர் கூறுவதெல்லாம் விந்தையே ! ஆயினும் நும து கருத்தை விளக்கியருளும்.

ஜய :—மஹாராஜ ! சொல்கின்றேன் ! கவனித்துக் கேட்டருளுக ! யான் தாரை நாட்டிற்கும் இந்நாட்டிற்கும் மத்தியிலிருக்கும் ஒரு மலைநாட்டை யாண்டுவரும் பில்லரா ஜன் ! என்னை ஜயபாலனென்பர் ! களவே எங்களுக்குக் கைவந்த தொழிலாயிருந்தது !

லீலா :—(ஆத்மகதமாய்) இதையுமொரு சிறந்த தொழி லென்று சொல்லுகின்றனரே! (தலைகுனிந்து நிற்றல்)

ஆதி :—(புன்சிரிப்புடன்) அதனுலென்ன! உலகத்தில் இதுவுமொரு தொழிலே! அதனுலேதான் 'களவுங் கற்று மற' என்று பெரியோர்கள் சொல்லுகின்றனர். இனியதை நீரும் மறப்பீரென்றே நம்புகின்றோம்!

ஐய :—உங்களது அநுக்கிரஹத்தால் அக்கொடுந்தொழி லையான் முன்னரே கட்டோடே விட்டுவிட்டேன். அது நிற்க, தங்களுக்கு ஞாபகமிருக்குமே? சுமார் பன்னிரண்டு வருஷங் களுக்குமுன், தாமுந் தேவியாரும் நான்கு வயதுள்ள ஒரு பெண் குழந்தையுடன் எனதுதுர்க்கத்திற் கருகில் வேட்டை யாட வந்தீர்களன்றோ?

ஆதி :—ஆ! கஷ்டம்! அஃது இன்னும் நன்றாய் ஞாபக மிருக்கின்றது.

ஐய :—அப்பொழுது திடீரென்று ஒரு பதினுறடிவேங் கை துரத்திவர, ஒரு மரத்தடியில் அக்குழைந்தையுடன் தங்கி யிருந்த தமது பரிவாரங்கள் பயந்து அவ்விடத்திலேயே குழந் தையை விட்டுவிட்டு ஓடத்தலைப்பட்டனரன்றோ?

ஆதி:—ஆம்! வாஸ்தவமே! பிறகு அக்குழைந்தையின் கதி என்னவாயிற்றோ?

ஐய :—நான் அச்சமயத்தில் தற்செயலாய் அவ்விடம் வந்தேன். அக்குழந்தை தனியாய் அழுதுகொண்டிருப்பதைக் க்கண்டு, அதனைவிட்டுப்பிரிய மநமில்லாமல், என்னுடனெ டுத்துச் சென்றேன். தாங்களும் அவ்விடத்தில் எல்லாந் தே டிவிட்டு எங்குங்காணுமல் மநம்வாடி கண்ணீரோடு நகருக்குத் திரும்பி வந்துவிட்டீர்கள்! அதுமுதல் அக்குழந்தை தாங்க ளிட்ட நாமதேயத்துடனே என் சொந்தமகளைப்போல் வளர் த்துவரப்பட்டனள்!

பத்மா :—நல்லது ! அவள் உயிருடனிருக்கின்றனளோ?

ஜய :—(லீலாவதியைக்காட்டி) அம்மணி ! இதோ இச் சிறுவனைப்போல் உடைதரித்து நிற்பவளே தமது செல்வப் புதல்வி லீலாவதி.

லீலா :—(ஆத்மகதமாய் ஸந்தோஷத்துடன்) ஆ ஆ! இம் மஹாராஜாவோ என் தந்தையார் ! இம்மாதரசி தானோ என்னைப்பெற்றவள் ! இதுவரை இப்பில்லர்களின் வயிற்றிற் பிறந்தவளென்றன்றோ நினைத்திருந்தேன்.

ஜய :—குழந்தாய் ! நீ போர்த்திருக்கும் புருஷ உடையைக்கழற்றிவிட்டு உன்தாய்தந்தையருக்கு அடிபணிவாய் ! (மேலங்கியைக்கழற்றுதல்)

ஆதி :—ஆ இதென்ன ! இவ்வாநந்த பரம்பரையால் எனக்குச்சித்தப்பிரமை யுண்டாகும்போல் தோன்றுகின்றதே! என்ன ஆச்சரியம் ! யான் இழந்துவிட்ட என்னருமைப் புதல்வியோ இவள் ! (லீலாவதியைக் கட்டியணைத்து) என் கண்ணே ! உன்னையான் இம்மங்களகரமான ஸமயத்திற் பெற்ற பாக்கியமேபாக்கியம்.

போஜ :—(ஆத்மகதமாய்) ஆ ! என்னுயிர்க்காதலி லீலாவதியே ! இவள் ஆதித்தியவர்ம மஹாராஜருடைய புதல்விதானோ ? அனறேல் இவ்விதகுணமும் அழகும் எங்கிருந்து வரும் ?

ஸபையோர் :—(ஸந்தோஷத்துடன்) ஆச்சரியம்! ஆச்சரியம் !!

பத்மா :—(லீலாவதியை நோக்கி) என் கண்மணி ! என்னருகில் வந்து என்னைக் கட்டியணைப்பாய் ! (கண்ணீர் பெருக) உன்னைக் காணுமல் நாங்கள்படும் வருத்தத்தை என் சொல்வோம் !

லீலா :—(அப்படியே செய்து) என்னருமைத்தாயே ! எல்லாம் ஈசனது அருளே !

**ஆதி :**—ஜயபாலரே ! இப்பேருதவிக்கு யாம் உமக்கு என்ன பிரதி செய்யப்போகின்றோம் !

**ஜய :**—மஹாராஜ ! தாங்கள் என்னை மன்னிப்பதே எனக்குச் சிறந்த கைம்மாறு. யான் இப்பெண்மணியைப்பற்றி ஒருசிறிய விண்ணப்பஞ் செய்யவேண்டியிருக்கின்றது.

**ஆதி :**—என்ன ! இவளை யாருக்காயினும் மணஞ் செய்துகொடுத்து விட்டீரோ ?

**ஜய :**—மஹாராஜ ! இன்னுமில்லை ! அதைப்பற்றியே யான் சொல்லவந்தேன் ! இதோ நிற்கின்றனரே போஜகுமாரர், இவர் இன்னாரென்றறியாமல், இவரை யோர் காட்டிற்கண்டு, இவரைக்கொண்டே இவரது அரண்மனையைக் கொள்ளையடித்தேன் ! பிறகு இவரது பராக்கிரமத்தைக் கண்டு, இவரை என் துர்க்கத்திற் கழைத்துச் சென்று, இப்பெண்மணியையும் இவருக்கு மணஞ்செய்து கொடுக்க நாடியிருந்தேன் ! இப்பெண்மணியும் இவர்மீது அளவற்ற காதல் கொண்டனள் ! அவருக்கும் இவள்மீது காதலுண்டாயிருக்கின்றதென்றறிந்து ஆநந்தங்கொண்டேன் ! பிறகு கொலைபாவங்களுக் கஞ்சாதவளான என் மனைவியின் சொல்லுக்கிணங்கி அவரைக்கொல்லத் துணிந்தேன். இதையறிந்து இப்பெண்மணியே அவரை எங்கள் கையினின்றுங் காப்பாற்றினள் ! அவரது மெய்க்காதலையும் பெற்றனள் ! ஆகவின், இச்சமயத்தில் தாங்கள் இப்பெண்மணியை இம்மஹாவீரருக்கே முறைப்படி மணஞ்செய்து கொடுப்பீர்களென்று பிரார்த்திக்கின்றேன் !

**ஆதி :**—சர்க்கரைப்பந்தலில் தேன்மாரிபொழிந்தாற்போலாயிற்று !

**ஜய :**—(போஜனை நோக்கி) இராஜகுமாரரே ! யான் செய்த பிழைகளை பொறுத்தருளவேண்டும் !

போஜ :— தாம் எனக்குச் செய்தவைகளில் அபராதமே தும் இல்லையே !

ஆதி :— புத்திஸாகரரே ! தமக்கிந்த ஸம்பந்தம் ஸம்ம தமோ ?

புத்தி :— மஹாராஜ ! இக்காட்சியையும் காண்பேனோ வென்றிருக்க, இப்படித் தாங்கள் கேட்பது விந்தையே ! இப்பெண்மணி பிறந்த உடனே இந்த ஸம்பந்தத்தை தாமும் தமது நண்பர் ஸ்ரீஸிந்துலராஜரும் ஏற்படுத்தி விட்டீர்களன் றோ ? ஈசனது அருளால், இதற்குக் குறுக்கே நின்ற அப்பாத கன் முஞ்ஜனும் தற்கொலைபுரிந்து கொண்டொழிந்தான் ! அக் கற்பிற்கரசி விலாஸவதியும் தன்பிராணபந்துவை யடைந்த னள் ! தாமும் வெகுநாளாய்க் காணாதிருந்த தமது அருமைப் புதல்வியைப் பெற்றீர்கள் ! இனி இவர்கள் எல்லோரும் ஒன் றுசேர்ந்து மநமகிழ்ந்திருப்பதைக் காண்பதைவிட எனக்கு வேறென்ன வேண்டியது ?

ஆதி :— இராஜகுமார ! என்புதல்வியைத் தாம் முன்னரே காந்தர்வத்தினால் மணந்தவராயினும், மறுபடியும் இப்போ ழுது நாங்கள் கண்டு களிக்க இவளைப் பாணிக்கிரஹணஞ் செய்து கொண்டு எங்களை யநுக்கிரஹிக்கவேண்டும். (போஜ னுக்கும் லீலாவதிக்கும் பாணிக்கிரஹணஞ்செய்வித்தல்)

போஜ :— இவையெலாம் ஈசனது திருவருளே ?

*"உலகொடுயிர் பரமாகி யொளிருமொரு பொருளை

யுவமைகடந் தப்பாலுக் கப்பாலாம் பொருளைக்

கலகமிடுங் காமாதி பகைஞரெலாம் பட்டுக்

கலக்கமுறமுயிர்ப்பறவைகளைக்களையும்பொருளைப்

* அநுபவாநந்ததீபிகை.

பலகலையின் முடிவின்முடி வாயிலகுபொருளைப்
பாவாபா வங்கடந்தோர் பங்கினுறை பொருளை
யலகறுமா நந்தநிறை வேவடிவாம் பொருளை
யருளுருவை யருளகமே யடைகவடைக்கலமே!"

ஆதி:—ஸபையோர்காள்! யான் கருதியதொன்றுளது! அதை நீங்கள் நிறைவேற்றி வைக்கவேண்டும்.

§ "ஐய சாலவு மலசின னரும்பெரு மூப்பும்
வெய்ய தாயதுயிலிடப் பெரும்பரம் விசித்த
தொய்யின் மாநிலச் சுவையுறு சிறைதுறந்தினியா
னுய்ய லாவதோர் நெறிபுக வுதவிட வேண்டும்!"

ஆகலின், இப்பொழுதே இவர்களுக்கு முடிசூட்ட விடைதந்தருளவேண்டும்.

ஸபை:—அப்படியே! மிக்க ஸந்தோஷம்!

ஆதி:—(போஜனையும் லீலாவதியையும் ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கச்செய்து, தனது மகுடத்தை போஜனுக்குச் சூட்டி) போஜகுமாரரே!

† "மன்னவன் வலிசெங் கோலினு லன்றி
வாளினுற் சேனையா லில்லை,
நன்னெறி வழுவா மன்னவன் றனக்கு
நாடெல்லாம் பேரர ணுகின்
மன்னுயி ரெல்லா மவன்படை யன்னோன்
மநமெலா மவனுறை யிடம்
இன்னதன் மையினு லரசனிப் பவனை
யிகல்செயுந் தெருநரு முளரோ?"

§ கம்பராமாயணம் † நீதிநூல.

ஆதலால், நீவிர் இருவரும் நமது பந்துமித்திரகளத்திரர்களு டன் நீடூழிகாலம் இந்த விக்ரமாஸநத்தின்மீது வீற்றிருந்து, ராஜாதிராஜராய், தாராராஜ்ஜியத்தையும் பூபாராராஜ்ஜியத் தையும் எப்படிப்பரிபாலித்து வருவீரோ, அப்படியே இவ் வுஜ்ஜயிநீ ராஜ்ஜியத்தையும் இரண்டாவது விக்கிரமாதித்ய னென்று சொல்லும்படி பரிபாலித்து வருவீரெனப் பிரார்த் திக்கின்றேன்!

**ஸபை :**—காவலர்திலக! அப்படியே செய்து எங்களை நுந்தந்தையார் விக்கிரமாதித்திய மஹாராஜனைப்போற் களிக் கச் செய்வீரென்று பிரார்த்திக்கின்றோம்!

**போஜ :**—ஸபையோர்காள்! ஏதோ எம்மாலியன்றமட் டும் நீதிநெறிவழுவாமல் அரசுபுரிகின்றோம்.

**புந்தி :**—இராஜகுமார! நீ எல்லாமுணர்ந்தவனாயினும், இச்சமயத்தில் யாமுனக்கு ஒன்று சொல்லவேண்டியது இரு க்கின்றது! அதனைக் கவனித்துக் கேட்டருளும்

* "நரிய மாலினுங் கண்ணுத லானினு
முரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோ ரைந்தினு மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்!"

**போஜ :**—எல்லாம் அவர்களுடைய அநுக்கிரஹமேயன் றி வேறன்று என்பதை நன்கு அறிவேன்!

**ஹரி :**—அதற்கென்ன ஸந்தேஹம்!

**வத்ஸ :**—அரசே! யாமுனக்கு அதிகமாய்க் கூறவேண் டியதொன்றுமில்லை.

* "சூது முந்துறச் சொல்லிய யாவையு
நீதி மன்ன! நினைக்கிலை யாயினும்,
ஓதமென்பன யாவையு மொய்ந்நுதற்
கோதை மூல மவையென வோர்தியே!"

* கம்பராமாயணம்.

போஜ :—அப்படியே !

கோவிந்த:—ராஜஸத்தம ! ஸகலத்தையுமறிந்த உனக்கு யான் நீதியெடுத்துரைப்பது பேதைமையே ! ஆயினும்,

* “பாரொடும் பகைகொள்கில னென்றபின்
போரொடுங்கும் புகழொடுங் காதுதன்
தாரொடுங்கல்செல் லாதது தந்தபின்
வேரொடுங்கெடல் வேண்டலுண்டாகுமோ ?”

போஜ :—அடிகாள் ! ஒருநாளுமில்லை !

காளி :—நண்ப ! அரசுரிமையில் யாவருந்துதிக்கத்தக்கவனை உனக்கு யான் கூறலும் வேண்டுமோ ?

* “உமைக்கு நாதற்கும் ஓங்குபுள் ளூர்திக்கும்
இமைப்பி னட்டமோ ரெட்டுடை யானுக்கும்
சமைந்த தோள்வலி தாங்கின ராயினும்
அமைச்சர் சொல்வழிப் பாற்பட லாற்றலே !”

போஜ:—நண்ப ! இதனாற்றான் மன்னர் உயிர்ப்பின்றி உயிரோடிருக்க நாடுவோரே.

ஸுமந்தர்:—இதுதான் மன்னர்களுக்குரிய லக்ஷணம்!

வையம் மன்னுயி ராகவம் மன்னுயி
ருய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்
கைய மின்றி யறங்கட வாதருண்
மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ ?”

வீர:—வாஸ்தவம் !

இனிய சொல்லின னீகைய னெண்ணினன்
வினையன் றூயன் விழுமியன் வென்றியன்

* கம்பராமாயணம்.

நினைபு நீதி நெறிகட வாமெனி
லனைய மன்னற் கழிவு முண் டாங்கொலோ !"

**போஜ:**—உங்களது அநுக்கிரஹமிருக்குமளவும் எமக் கென்னகுறை ?

நன்றினைத் தாய்போலு மருளுடன் மக்களைக்
கருத்துள மிருத்தி வேந்தர்
காவிறைத் தூழிப் புவனமகி லத்தையுங்
காப்பதே கடமை யாகும் !
மன்றுபுகழ் மாளவ மென்றென்று மோங்குமா
வளமுடன் பாது காத்து
பரல்லோகத் யாகவுந் நிரவத்ய மாகவுமவ்
வன்கடனை நிறைவேற் றுவாம் !
மன்றமதி செயியெமக் குறுதியொடு வல்லமையு
நக்கியொரு நாளுமின்றி
நாட்டினிற் ஜாதிபேத போதங்கள் பாராது
நாடி நற்றவ மில்லை
என்றதுள வேடவிநின் றெங்கணு நிறைந்துளோ
ஸர்வஜ்ன் தேவ தேவன்
என்னுடை விருப்பத்தை நிறைவேற் றுவாராக
வேமமா மெம்பிரானே !

**ஆதி**:—அவ்யாஜகருணாமூர்த்தியான [எம்பிரான் அப் படியே நிறைவேற்றுவர் !

**போஜ:**—சான்றோர்களே ! யான் இவ்வளவு ஸௌகத்தை யும் நலத்தையும் பெறத்தகவனல்லேன் ! என் பிதாவுக்குப் பிராணநேசரும் எனக்கு ஆசிரியருமான புத்திஸாகரரையே

எனது முதன்மந்திரியா யடையப்பெற்றேன்! ஸகல நீதிகளையு மறிந்த ஹரிஹரரையும் ஸுகேசரையும் எமது முக்கிய ஸசிவர்களாகக்கொண்டேன் ! எனக்குப் பரமோபகாரஞ் செய்த வத்ஸராஜரையும் வீரஸேநரையும் எனது மஹாராஜ்ஜியத்திற்கு ஸேநாதிபதிகளாகக் கொண்டேன் ! என்னைக் கொடிய ஸாபத்தின் வாயினின்றும் காப்பாற்றிய கோவிந்த பண்டிதரை எனது ஆஸ்தாந பண்டிதராகப் பெற்றேன ! பசிதாகத்தினுற் காட்டில் வருந்திக்கஷ்டப்பட்ட என்னைக் கருணையுடன் காப்பாற்றிய பில்லராஜர் ஜயபாலரையே எனது நகபாலகராகவடைந்தேன் ! என் பிராணனைப்பன்முறைக்காப்பாற்றின என் பிராணநேசர் நாஸிதாஸனையும் அந்திரதேசத்தையாண்டவர எனக்குப் பிரதிநிதியாகக் கொண்டேன் ! ஆதித்திய வர்ம மஹாராஜரது நல்ல அபிப்பிராயத்தையுங்கொண்டேன் ! கற்பிற்கரசி விலாஸவதியையும் அடைந்தேன் ! என்னுயிர்க் காதலியாகிய லீலாவதியையும் மணம்புரிந்தேன் ! நுங்களது அநுக்கிரஹத்தால் இம்மத்தியதேசம் முழுதிற்கும் சக்கிரவர்த்தியானேன் ! இவ்வுலகில் யான் விரும்பத் தக்கன வெல்லா மெய்தினேன் ! இனி எனக்கென்றே குறை ?

ஆக்குவது மழிப்பதுவு நம்மாலிங்கே
  அணுவளவு மில்லையென வுணர்ந்திடல்வேண்டும்
ஆக்குவது மழிப்பதுவு மநாதியாய
  அரும்பொருளின் செய்கையென அறிதல்வேண்டும்;
போக்கியென்னை யுயிர்நீக்கிப் புவியோ டென்றன்
  பூவையுடன் வாழ்ந்திருக்கப் புந்தி பூண்டான் !
ஆக்கையழி வுறப்பழியே கண்டானம்மா !
  அதைநினைந்து நீதியுடனென்டு வாழ்வோம் !

ஆகலின் எல்லாம் ஈசனது திருவருளே !

தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை
மூவர் கோனாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும பாகத் தெந்தை
யாவர்கோ னெம்மையும்வந் தாண்டு கொண்டான், ]
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம் ;
மேவினோ மவனடியா ரடியா ரோடு
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே !"

(நடர்கள் எல்லோரும் ஒன்றுகூடி கானஞ்செய்தல்)

ஜயதி ஜயீ ஸப்தமைட்வர்ட் சக்ரபாலக :,
ஜக தகிலம் பாலயந் நந்ந்ய நாயக : !
ரக்ஷதியோ புவி ஸதயோ பாரதாந் ஸம :,
ரண தநபுர கல்பிதா பிஷேக விப்ரம : !—ஜ.
ஜீவ சிரம் ராஜ்யதுராம் ஸம்யக் உத்வஹந்,
ஜித ஸகலா ராதிகணோ மாத்ருவந் மஹந் !—ஜ.
ஜய ! ஜய ! போ ஈட்யவ்ருத்த ! ஜய ! மஹாப்ரபோ !
ஜய ! ஜய ! போ ஸார்வபௌம ! ஜய ராமாவிபோ !
—ஜ.

, (மலர்மாரிபெய்து யாவரும் நிஷ்கிரமித்தல்.)




* திருவாசகம்.

## தமிழ்ச் செய்யுண் முதற் குறிப் பகராதி.

(* இக்குறியுற்றன மேற்கோட் பாக்களாம்;
† இக்குறியுற்றன மாறுத லடையப்பெற்ற
மேற்கோட்பாக்களாம்; மற்றவை
இந்நூலாசிரியர் இயற்றியபாக்களாம்.)

ஸம்ஸ்கிருத செய்யுண்

# முதற்குறிப்பகராதி

# கீர்த்தந முதற்குறிப் பகராதி.

# அநுபந்தம் I.



## ஸம்ஸ்கிருத அருப்பதப் பொருளகராதி.



**அக்கிரம்** (கஅ ற)—முதல், உயர்வு.

**அக்கிரகண்ணியன்** (கஅ ஹ ஹணூ))—முதலில் எண்ணத்தக்கவன், முதன்மையானவன்.

**அக்கினி** (கஅ ஹி)—நெருப்பு, தீ.

**அக்கினிசரணம்** (கஅஹிஶரண)—ஓமம் வளர்க்குமிடம், ஓமசாலை.

**அக்கினிஸம்ஸ்காரம்** (கஅஹிஸம்ஸ்கார)—பிணத்தை மந்திரபூர்வகமாய் சிதையில் வைத்துக் கொள்ளிப்போடுதல்.

**அங்கம்** (கஅங்க)—நாடகத்தின் ஓர் பேருறுப்பு.

**அங்கனை** (கஅங்கநா)—பெண், ஸ்திரீ.

**அங்குரம்** (கஅங்குர)—முளை.

**அசநம்** (கஅஶந)—சோறு, உணவு.

**அசநலோபி** (கஅஶநலோபீ)—தன் வயிற்றுக்குக்கூட சோறு தின்னாத பிசுநன்.

**அசலை** (கஅசலா)—பூமி.

**அசிதித்துவயம்** (கஅஶீதித்3வய)—ஸம்ஹிதை, பிராஹ்மணம், ஆரண்ணியகம் என்னும் மூன்று பிரிவுகளோடு கூடி, எண்பத்திரண்டு பிரச்நங்கள் அடங்கிய தைத்திரிய சாகையைச்சேர்ந்த கிருஷ்ண யஜுர்வேதம் முழுதும்.

அசேதநமான (அசேதந)—அறிவில்லாத.

அட்டஹாஸம் (அட்டஹாஸ)—பெருநகை.

அதரம் (அதர)—கீழுதடு.

அதிதி (அதிதி)—விருந்தாளி.

அதிதெய்வதம் (அதிதைவத)—முக்கியக்கடவுள்.

அந்தன் (அந்த)—குருடன்.

அந்ததாமிஸ்ரம் (அந்ததாமிஸ்ர)—காரிருள் நிறைந்த ஓர் நரகம்.

அந்தர்யாமி (அந்தர்யாமீ)—ஒவ்வொருவருடைய மநத்திலுங் குடிகொண்டிருக்குங் கடவுள்.

அநகன் (அநவ)—மாசிலாதவன், கடவுள்.

அநாமயம் (அநாமய)—நோயின்மை, க்ஷேமம்.

அநாரியமான (அநார்ய)—அறிவுடையோர் செய்யத்தகாத.

அநுசிதமான (அநுசித)—தகுதியற்ற.

அநுபமமான (அநுபம)—உவமையற்ற.

அநுரஞ்ஜநம் (அநுரஞ்ஜந)—ஸந்தோஷிப்பித்தல்.

அநுபத்தமான (அநுபத்த)—ஒத்த, ஏற்ற.

அநுபந்தம் (அநுபந்த)—ஒரு புஸ்தகத்தின் பின் சேர்க்கப்பட்ட விஷயம் (Appendix).

அநுராகம் (அநுராக)—அன்பு.

அநுரூபமான (அநுரூப)—தகுதியான.

அபயம் (அபய)—அடைக்கலம்.

அபராதம் (அபராத)—குற்றம், பிழை.

அபவாதம் (அபவாத)—பழிச்சொல், அவதூறு.

அபலை (அபலா)—மெல்லியாள், பெண்.

அபலமான (𑌅𑌫𑌲)—பயனற்ற.

அபிநயம் (𑌅𑌭𑌿𑌨𑌯)—எடுத்த தன்மைக்கிசைந்தவாறு ஸோக துக்காதி பாவங்களை அடுத்துக் காட்டுதல்.

அபிமுகம் (𑌅𑌭𑌿𑌮𑍁𑌖)—எதிர், நேர் முகம்.

அம்ப! (𑌅𑌮𑍍𑌬!)—அன்னையே! தாயே!

அமோகமாய் (𑌅𑌮𑍋𑌘)—மிகுதியாய், குறைவில்லாமல், வீணாகாமல்.

அர்க்கன் (𑌅𑌰𑍍𑌕)—ஸூரியன்.

அர்ஹன் (𑌅𑌰𑍍𑌹)—யோக்கியன், தக்கவன்.

அம்புஜம் (𑌅𑌮𑍍𑌬𑍁𑌜)—தாமரை, தாமரை மலர்.

அம்புதம் (𑌅𑌮𑍍𑌬𑍁𑌦)—மேகம்.

அர்ப்பணம் (𑌅𑌰𑍍𑌪𑌣)—அளித்தல்.

அராஜகம் (𑌅𑌰𑌾𑌜𑌕)—அரசாட்சியின்மை.

அல்லோலகல்லோலம் (𑌅𑌲𑍍𑌲𑍋𑌲𑌕𑌲𑍍𑌲𑍋𑌲)—அமர்க்களம்.

அவ்யாஜமான (𑌅𑌵𑍍𑌯𑌾𑌜)—காரணமின்றி, கபடமின்றி, ஸஹஜமான.

அவநம் (𑌅𑌵𑌨)—பாதுகாத்தல்.

அவநிபதி (𑌅𑌵𑌨𑌿𑌪𑌤𑌿)—பூமியையாள்பவன், அரசன், பூபதி.

அவஸ்தை (𑌅𑌵𑌸𑍍𑌥𑌾)—தசை, நிலை, துயர்.

அஸங்கதம் (𑌅𑌸𑌙𑍍𑌗𑌤)—ஒவ்வாமை.

அஸாதாரண (𑌅𑌸𑌾𑌧𑌾𑌰𑌣)—விந்தையான, அஸாமாந்யமான.

ஆக்ருதி (𑌆𑌕𑍃𑌤𑌿)—உருவம், வடிவம்.

ஆங்கலகீதி (𑌆𑌙𑍍𑌗𑌲𑌗𑍀𑌤𑌿)—இங்கிலீஷ் மெட்டு.

ஆசமநம் (𑌆𑌚𑌮𑌨)—பகவந்நாமாதி மந்திரத்தையுச்சரித்துக் கொண்டே நீர் முதலியவற்றை யுட்கொள்ளல்.

ஆச்ரிதர் (𑌆𑌶𑍍𑌰𑌿𑌤)—ஒருவனை தனக்கு அடைக்கலமாய் அடுத்தவர்.

ஆச்ரமம் (𑌆𑌶𑍍𑌰𑌮)—சாலை; பர்ணசாலை.

ஆச்சரியம் (𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯)—வியப்பு.

ஆச்சரியோக்தி (𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑍋𑌕𑍍𑌤𑌿)—வியப்பைக் கூறும் ஓர் அலங்காரம்.

ஆசயம் (𑌆𑌶𑌯)—எண்ணம், மநம்.

ஆஞ்ஞை (𑌆𑌜𑍍𑌞𑌾)—கட்டளை, உத்திரவு.

ஆஜ்யம் (𑌆𑌜𑍍𑌯)—நெய்.

ஆடம்பரம் (𑌆𑌡𑌂𑌬𑌰)—போர்ப்பறை, கொண்டாட்டம்.

ஆத்மா (𑌆𑌤𑍍𑌮𑌾)—ஜீவன்; பிரமன்; தான்.

ஆத்மகதம் (𑌆𑌤𑍍𑌮𑌗𑌤)—தனிமொழி, தற்கூற்று, ஸ்வகதம்.

ஆத்மஹத்தி (𑌆𑌤𑍍𑌮𑌹𑌤𑍍𑌯𑌾)—தற்கொலை.

ஆநநம் (𑌆𑌨𑌨)—முகம்.

ஆப்தன் (𑌆𑌪𑍍𑌤)—வேண்டியவன், ஹிதன்.

ஆபணம் (𑌆𑌪𑌣)—கடை; கடைவீதி.

ஆயத்தம் (𑌆𑌯𑌤𑍍𑌤)—அதீநம், உட்படல்; தயார், ஸித்தம்.

ஆர்த்தி (𑌆𑌰𑍍𑌤𑍍𑌤𑌿)—துன்பம், மநத்தளர்ச்சி.

ஆர்யே! (𑌆𑌰𑍍𑌯𑍇!)—அறிவுடையோய்! இஃது நாடகபரிபாஷையில் ஸூத்திரதாரன் நடியைக் கூப்பிடும் முறை.

ஆர்யபுத்திரர் (𑌆𑌰𑍍𑌯𑌪𑍁𑌤𑍍𑌰)—கணவன். இஃது நாடகபரிபாஷையில் தலைவி தலைவனைக் கூப்பிடும் முறை.

ஆராதநம் (𑌆𑌰𑌾𑌧𑌨)—பூஜை, மரியாதை, வணங்கல்.

ஆராதித (𑌆𑌰𑌾𑌧𑌿𑌤)—பூஜிக்கப்பட்ட.

ஆலோகம் (𑌆𑌲𑍋𑌕)—ஸூர்யனுடைய காந்தி, பிரகாசம்.

ஆலோகசித்திரம் (𑌆𑌲𑍋𑌕𑌚𑌿𑌤𑍍𑌰)—ஸூரியனுடைய பிரகாசத்தைக்கொண்டு யந்திரத்தினால் எடுக்கப்படும் படம்; புகைபடம். (Photograph).

ஆவேசம் (𑌆𑌵𑍇𑌶)—வெறி.

ஆஸ்தானம் (𑌆𑌸𑍍𑌥𑌾𑌨)—கொலுமண்டபம்.

ஆஸ்தானிகர் (𑌆𑌸𑍍𑌥𑌾𑌨𑌿𑌕)—ராஜஸபாஸதர்.

ஆஹ்வானம் (𑌆𑌹𑍍𑌵𑌾𑌨)—அழைத்தல், கூப்பிடுதல்.

இங்கிதம் (𑌇𑌙𑍍𑌗𑌿𑌤)—முகக்குறிப்பு, கண்சாடை.

இந்து (𑌇𑌨𑍍𑌦𑍁)—திங்கள், சந்திரன்.

இஹம் (𑌇𑌹)—இம்மை, இப்பிறப்பு.

இஹபரம் (𑌇𑌹𑌪𑌰)—இம்மைமறுமை.

ஈஷத்து (𑌈𑌷𑌤𑍍)—கொஞ்சம், சிறுதளவு.

உடு (𑌉𑌡𑍁)—நக்ஷத்திரம்.

உத்கடமான (𑌉𑌤𑍍𑌕𑌟)—அதிகமான, மிதமிஞ்சின.

உத்கண்டை (𑌉𑌤𑍍𑌕𑌣𑍍𑌠𑌾)—ஆவல்.

உதாஸீனமாய் (𑌉𑌦𑌾𑌸𑍀𑌨)—மத்தியஸ்தமாய், பிறத்தியானைப்போல்.

உபசாந்தி (𑌉𑌪𑌶𑌾𑌨𑍍𑌤𑌿)—ஒழிவு, அமரிக்கை.

உபநிஷத்து (𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍)—வேதாந்தம், வேதத்துள் ஞானபாகம்.

உபயம் (𑌉𑌭𑌯)—இரண்டு, இருதலை.

உபயப் பிரஷ்டன் (𑌉𑌭𑌯𑌭𑍍𑌰𑌷𑍍𑌟)—இரண்டு வகையிலுந் தள்ளுபடியானவன்.

உபவாஸம் (𑌉𑌪𑌵𑌾𑌸)—நோன்பு.

உபாங்கம் (உபாංග)—சிற்றுறுப்புகள், துணையுறுப்புகள்.

உபேந்திரன் (உபேංද்ர)—விஷ்ணு, திருமால்.

உரகம் (உரக)—நாகம், பாம்பு, ஸர்ப்பம்.

உல்லங்கநம் (உல்லංඝந)—மீறுதல், தடை.

ஏகபுத்திரன் (ஏகபுத்ர)—தாய்தகப்பனுக்கொரேபிள்ளை.

ஏகவீரன் (ஏகவீர)—ஒப்பற்றசூரன்.

ஏகவேணீதரா (ஏகவேணீதரா)—சோகத்தினால் அழ கிய கூந்தலை ஒரேஜடையாக்கி பாழடையச் செய்பவள்.

ஏகாந்தம் (ஏகாந்த)—தனிமை.

ஐஹிகமான (ஐஹிக)—இவ்வுலகத்தைச் சேர்ந்த, இம் மைக்குரிய.

ஓஜஸ்வீ (ஓஜஸ்வீ)—பலசாலி, பராக்கிரமசாலி.

ஔதாரியம் (ஔதார்ய)—உதாரத்தன்மை, மிகுகொடை.

ஔஷதம் (ஔஷத)—மருந்து.

ஔபாஸநம் (ஔபாஸந)—அக்கினியை தினந்தோறும் வை திகச் சடங்குகளைக்கொண்டு உபாஸித்தல்.

கசம் (கச)—கூந்தல், மயிர்.

கட்கம் (கட்க)—கத்தி, பட்டாகத்தி.

கடாக்ஷம் (கடாக்ஷ)—கடைக்கண், தயவு.

கடோரன் (கடோர)—கடுமையானவன்.

கண்டகன் (கண்டக)—முட்போல் யாவரையும் வருத்துபவன், துஷ்டன், தீயன்.

கத்கதஸ்வரம் (கத்கதஸ்வர)—கம்மினகுரல், வைஸ்வர்யம், ஸ்வரபங்கம்.

கநககும்பம் (கநககும்ப)—பொற்குடம்.

கபாடம் (கவாட)—கதவு.

கபோதம் (கபோத)—கரும்புறு.

கபோலம் (கபோல)—கன்னம்.

கமண்டலு (கமண்டலு)—கெண்டிகை, தவத்தோர் யதிகள் முதலானோர் வைத்திருக்கும் சுரைக்குடுக்கு.

கமநீயமான (கமநீய)—அழகான.

கமலபவர் (கமலபவ)—தாமரை மலரிலுண்டானவர், பிரமதேவன்.

கரதாளம் (கரதால)—கைகொட்டல்.

கரவாளம் (கரவால)—கைவாள்.

கருணை (கருணா)—தயவு, கிருபை.

கருணைகடாக்ஷம் (கருணாகடாக்ஷ)—கிருபாநோக்கம், அநுக்கிரஹம்.

கருணம் (கருண)—சோகம், துக்கம், அவலம்.

கர்ணகடோரம் (கர்ணகடோர)—காதுக்குக்கொடுமையானது.

கலகலம் (கலகல)—கோலாஹலம், இரைச்சல்.

கல்லியாணி ! (கல்யாணி !)நல்லாய் ! இஃது பரஸ்திரீகளை யழைக்கும் முறையிலொன்று.

களம் (கல)—கழுத்து.

களத்திரம் (கலத்ர)—மனைவி.

காதுகன் (காதக)—கொலைபாதகன்.

காதை (காதா)—கதை, சரித்திரம், செய்தி.

காந்தன் (காந்த)—கணவன், காதலன்.

காந்தை (காந்தா)—மனைவி, காதலி.

காந்தர்வம் (ஹாஂயவ்ஂ)—தலைமகனும் தலைமகளும் தங்களிற்றாமே கூடும் மணம். இது எண்வகை மணங்களிலொன்று.

கானாமிருதம் (ஙாநாம்ருத)—இசைப்பாட்டாகிற அமுதம்.

காமம் (கூாம)—ஸ்திரீ புருஷர்களின் ஸம்போக விஷயமான அபிலாஷை, புணர்ச்சியில் விருப்பம், மையல்.

காமன (கூாம)—மந்மதன்.

காமயமானாவஸ்தை (கூாமயமாநாவஸ்ா)—காதல் கொண்டவர்களின் நிலை.

காமாந்தன் (கூாமாந்ய)—காமவெறி கொண்டவன்.

காமாவஸ்தை (கூாமாவஸ்ா)—காமநோய், பதினாறுவகை காமதசை.

காமி (கூாமீ)<br>காமுகன் (கூாமுக)—காமவெறி பிடித்தவன்.

காம்பீரியம் (ஙாம்ஹீயஂ)—ஆர்ப்பரிப்பு, ஆழம்.

காரியஸ்தன் (கூாயஂஸ்ய)—காரியத்தலைவன், தர்மகர்த்தா.

காலகாலன் (கூாலகூால)—நமனுக்குநமன், சிவன்.

காலகண்டன் (கூாலகூண்ட)—பக்தர்களைப் பாதுகாப்பதற்காக காலகூடவிஷத்தை கண்டத்தில் உட்கொண்டவன், சிவன்.

காவ்வியம் (கூாவ்ய)—கவியினால் இயற்றப்பட்ட நூல்.

கிங்கரன் (கிஂகர)—எவல்செய்வோன், தூதன்.

கிருதம் (ஹ்ருத)—நெய்.

கிருத்தியம் (க்ருத்ய)—செய்கை, செயல்.

கிருதஞ்ஞை (க்ருதஜ்ஞா)—நன்றியறிவு.

கிருதார்த்தன் (𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑌃)—எடுத்தகாரியத்தை முடித்தவன், தந்கியன்.

கிருத்திரிம (𑌕𑍃𑌤𑍍𑌰𑌿𑌮)—மோசமான, வஞ்சனையான.

குசம் (𑌕𑍁𑌚)—ஸ்தநம், முலை.

குடிலமான (𑌕𑍁𑌟𑌿𑌲)—வளைந்த, வஞ்சகமான.

குடீரம் (𑌕𑍁𑌟𑍀𑌰)—குடிசை, குடில்.

குதூஹலம் (𑌕𑍁𑌤𑍂𑌹𑌲)—விரும்பம், ஆவல்.

குந்தம் (𑌕𑍁𑌨𑍍𑌤)—கைவேல்.

குருகுலம் (𑌗𑍁𑌰𑍁𑌕𑍁𑌲)—ஆசானுடைய அரண்மனை.

குரூரன் (𑌕𑍍𑌰𑍂𑌰)—கொடுமையானவன்.

குரோசம் (𑌕𑍍𑌰𑍋𑌶)—கூப்பிடுதூரம்.

குரோதம் (𑌕𑍍𑌰𑍋𑌧)—சினம், வெகுளி.

குலம் (𑌕𑍁𑌲)—வீடு, வம்சம்.

குலதநர் (𑌕𑍁𑌲𑌧𑌨)—குலத்தின் மேன்மையையே தமக்குச் சிறந்த பொருளாய் நினைப்பவர், உயர்குலத்தவர்.

குலிசம் (𑌕𑍁𑌲𑌿𑌶)—இடியேறு, வஜ்ஜிராயுதம்.

குவலயம் (𑌕𑍁𑌵𑌲𑌯)—குவளை, பூமி.

கூடமாய் (𑌗𑍂𑌢𑌮𑍍)—இரஹஸ்யமாய், மறைவாய், வஞ்சகமாய், ஏகாந்தமாய்.

கேசம் (𑌕𑍇𑌶)—மயிர்.

கேசபாசம் (𑌕𑍇𑌶𑌪𑌾𑌶)—கூந்தல்.

கோமளமான (𑌕𑍋𑌮𑌲)—அழகான, மிருதுவான.

கோமலாங்கி (𑌕𑍋𑌮𑌲𑌾𑌂𑌗𑍀)—கட்டழகி.

கோலாஹலம் (𑌕𑍋𑌲𑌾𑌹𑌲)—குசால்.

க்ஷமித்தல் (க்ஷமா ந)—பிழை பொருத்தல்.

சங்கை (ஶங்கா)—அச்சம், ஐயம்.

சங்கம் (ஶங்க)—சங்கு, பாலாடை.

சங்கத்துவாநம் (ஶங்கத்வா ந)—சங்கநாதம்.

சசாங்கன் (ஶஶாங்க)—சந்திரன், சிரேஷ்டன்.

சஞ்சலம் (சஞ்சல)—நிலையில்லாமை, நடுக்கம்.

சண்டி (சண்டீ)—கோபக்காரி; துர்க்கை.

சந்திரிகை (சந்த்ரிகா)—நிலவு.

சபதம் (ஶபத)—ஆணை, ஒட்டம்.

சமநாரி (ஶமநாரி)—யமனைக்கொன்றவன், சிவன்.

சயநம் (ஶயந)—படுக்கை.

சயநகிருஹம் (ஶயநக்ருஹ)—பள்ளியறை.

சர்மம் (சர்ம)—தோல்.

சரணம் (சரண)—கால்; செய்யுளடி.

சரணம் (ஶரண)—அடைக்கலம், அபயம், வீடு.

சல்லியம் (ஶல்ய)—ஆயுத நுனி, அம்புமுனை; முள்.

சலநம் (சலந)—அசைவு, அழிவு, முடிவு.

சாபம் (சாப)—வில்.

சார்ங்கி (ஶார்ங்கீ)—விஷ்ணு.

சாரதாகமம் (ஶாரதாகம)—சரத்காலத்தின் வரவு; ஸரஸ்வதியின் ஸமாகமம்.

சாஸநம் (ஶாஸந)—அரசாணை, கட்டளை.

சாஸநபத்திரம் (ஶாஸநபத்ர)—தண்டனைப் பத்திரிகை.

சிசு (ஶிஶு)—குழந்தை.

சிபிரம் (ஶிபிர)—தண்டு இறங்கியிருக்குமிடம், கூடாரம்.

சிரம் (ஶிரஃ)—தலை.

சிரச்சேதம் (ஶிரஶ்சேத)—தலையவதாரம், தலையைவாங்கி விடுதல்.

சிரஞ்ஜீவி (சிரஞ்ஜீவீ)—நெடுங்காலம் ஜீவிப்போன்.

சிரேயசு (ஶ்ரேயஃ)—கீர்த்தி, நன்மை, நலம்.

சிலாக்கியமான (ஶ்லாக்ய)—புகழத்தக்க, முக்கியமான.

சிஷ்டர் (ஶிஷ்ட)—பெரியோர், நல்லோர், தெய்வதொண்டர்.

சேஷம் (ஶேஷ)—மிச்சப்பொருள்.

சோகம் (ஶோக)—துக்காதிக்கியம், மிகுதுயர்.

சோகாகாரம் (ஶோகாகார)—அதிகதுக்கத்திலிருக்கும்பொழுது ராஜஸ்திரீகள் தங்குமறை; துயர் அறை.

சோகாக்கிராந்தை (ஶோகாக்ராந்தா)—மிகுதுயர் கொண்டவள்.

சோபநம் (ஶோபந)—சுபம், அழகு, ஸந்தோஷம்.

சோபநவார்த்தை (ஶோபநவார்த்தா)—ஸந்தோஷ ஸமாசாரம், சுபசெய்தி.

சோரன் (சோர)—திருடன், கள்வன்.

சோரநாயகன் (சோரநாயக)—கள்ளப்புருஷன்.

ஜடிதி (ஜடிதி)—சீக்கிரம், விரைவு.

ஜநாந்திகம் (ஜநாந்திக)—அரங்கத்தில் நடர்கள் பலர் இருக்கும்பொழுது சிலர் மாத்திரம் தமக்குள்ளே பிறர் அறியாவண்ணம் மறைவாய் பேசுதல்; புறக்கூற்று.

ஜய ! (ஜய !)—வெற்றிகொண்டோங்குக !

ஜயத்துவஜம் (ஜயத்வஜ)—வெற்றிக்கொடி.

தத்தஹிருதயம் (ஐ ஹ்ரு ஹ்ருதய)—பாழ்மநம்.

தண்டம் (தண்ட)—ஊன்றுகோல், தண்டித்தல்.

தண்டகம் (தண்டக)—வடமொழியினோர் செய்யுள்.

ததாஸ்து ! (ததாஸ்து !)—அப்படியே யாகக்கடவது! முற்று மப்படியாக !

தந்வங்கி (தந்வங்கீ)—சிற்றிடையாள்.

தநயன் (தநய)—புத்திரன், புதல்வன்.

தநு (தநு)—உடல், சரீரம்.

தபநன் (தபந)—ஸூரியன், வெங்கதிரவன்.

தர்ப்பம் (தர்ப)—கர்வம், அஹங்காரம், இறுமாப்பு.

தர்மதாரம் (தர்மதார)—தருமபத்நிசி, இல்லொழுக்கிற்றி றம்பா மனைவி.

தர்மஸங்கடம் (தர்மஸங்கட)—காரியமுட்டுப்பாடு.

தராதரம் (தராதர)—மலை, பர்வதம்.

தராதிபன் (தராதிப)—பூமியை யாளுவோன், அரசன்.

தருணம் (தருண)—இளமை, ஸமயம், பக்குவம்.

தருணி (தருணீ)—பதினாறு வயசுக்குமேல் முப்பது வயசுக்குட்பட்ட இளம் பெண்.

தளம் (தல)—பூவிதழ்.

தாக்ஷிண்ணியம் (தாக்ஷிண்ய)—இணக்கம், மரியாதை.

தாதிருத்துவம் (தாத்ருத்வ)—கொடை, ஈகை.

தாபம் (தாப)—மநத்துயர், வெப்பம்.

தாருணம் (தாருண)—பயங்கரமானது.

தாருண்ணியம் (தாருண்ய)—இளம்பருவம், யௌவநம்.

திக்காரம் (திக்கார)—பழித்தல், நிந்தித்தல்.

தீரன் (𑌧𑍀𑌰)—திண்ணியன்.

தீரத்துவம் (𑌧𑍀𑌰𑌤𑍍𑌵)—அறிவுடைமை, உறுதி, தைரியம்.

துங்கம் (𑌤𑍁𑌙𑍍𑌗)—உயர்ந்தது, உயர்ச்சி, பெருமை.

துர்க்கம் (𑌦𑍁𑌰𑍍𑌗)—மலைமேற் கோட்டை.

துர்க்கந்தம் (𑌦𑍁𑌰𑍍𑌗𑌨𑍍𑌧)—கெட்ட நாற்றம்.

துர்கதி (𑌦𑍁𑌰𑍍𑌗𑌤𑌿)—கெட்ட நடை, நரகம்.

துர்பாக்கியன் (𑌦𑍁𑌰𑍍𑌭𑌾𑌗𑍍𑌯)—அதிருஷ்ட ஹீநன், ஏழ்மை யானவன்.

துர்லபம் (𑌦𑍁𑌰𑍍𑌲𑌭)—அருமையானது, பெறுதற்கரியது.

துரிதம் (𑌦𑍁𑌰𑌿𑌤)—துன்பம், பாவம்.

துஷ்கிருத்தியம் (𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍍𑌯)—தீச்செயல், கெட்ட நடக்கை.

தூர்த்தன் (𑌧𑍂𑌰𑍍𑌤)—வஞ்சகன், காமுகன்.

தூரியகோஷம் (𑌤𑍂𑌰𑍍𑌯𑌘𑍋𑌷)—முரசப்பறை.

தேஜஸ்வீ (𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑍀)—காந்திபெற்றவன், அழகன்.

தேசிகன் (𑌦𑍇𑌶𑌿𑌕)—உபாத்தியாயன், குரு, ஆசான்.

தேவி (𑌦𑍇𑌵𑍀)—அரசி, தலைவி, தேவப்பெண்.

தைந்யம் (𑌦𑍈𑌨𑍍𑌯)—துக்கத்தினாலோ தாரித்திரியத்தினாலோ அபராதத்தினாலோ தன்னையே பழித்துக்கொள்ளுவதற்கேதுவான மநத்தளர்ச்சி; தாழ்மை.

தோமரம் (𑌤𑍋𑌮𑌰)—இருப்புலக்கை.

தோரணி (𑌧𑍋𑌰𑌣𑍀)—ஒழுங்கு, வழிவகை.

தோஹதம் (𑌦𑍋𑌹𑌦)—வயாப்பண்டம், வயலுக்கிடுமெரு.

தௌர்ப்பாக்கியம் (𑌦𑍌𑌰𑍍𑌭𑌾𑌗𑍍𑌯)—துரதிர்ஷ்டம், பாக்கிய ஹீநம்.

நடர் (𑌨𑌟𑌃)—நாடகத்தை நடித்துக்காட்டுதற் கேதுவாய் நிற்கும் நடாத்துநர்.

நடி (𑌨𑌟𑍀)—ஸூத்திரதாரனுடைய கற்றறிவுடைய காதலி.

நரபதி (𑌨𑌰𑌪𑌤𑌿)—குடிகளுக்கிறைவன், அரசன்.

நவரஸம்—ஒன்பான் சுவை.

நவீந (𑌨𑌵𑍀𑌨)—புதிய, தற்காலத்திய.

நாடகம் (𑌨𑌾𑌟𑌕)—காட்சிநூலாகிய ரூபகங்கள் பத்தினுள் ஒன்று.

நாந்தி (𑌨𑌾𑌨𑍍𑌦𑍀)—நாடகத்தின் துவக்கத்தில் செய்யும்வாழ்த்து.

நாமதேயம் (𑌨𑌾𑌮𑌧𑍇𑌯)—பெயர்.

நாயகன் (𑌨𑌾𑌯𑌕)—நாடகத்தலைவன்; தலைவன்.

நாயகி (𑌨𑌾𑌯𑌿𑌕𑌾)—நாடகத்தலைவி, தலைவி.

நாஸாபுடம் (𑌨𑌾𑌸𑌾𑌪𑍁𑌟)—மூக்குத்தொளை.

நிகேதநம் (𑌨𑌿𑌕𑍇𑌤𑌨)—இருப்பிடம், வீடு.

நிசிதமான (𑌨𑌿𑌶𑌿𑌤)—கூர்மையான.

நிதர்சநம் (𑌨𑌿𑌦𑌰𑍍𑌶𑌨)—உதாஹரணம், அத்தாட்சி.

நிதாநம் (𑌨𑌿𑌦𑌾𑌨)—முதற்காரணம், நிச்சயம்.

நிந்தியமான (𑌨𑌿𑌨𑍍𑌦𑍍𑌯)—இகழத்தக்க.

நிபந்தநம் (𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌨)—கட்டு, கடமை.

நிபாதம் (𑌨𑌿𑌪𑌾𑌤)—விழுதல், நாசமடைதல், அழிதல்.

நியந்தா (𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑌾)—முறையையமைப்பவன், ஆண்டவன்.

நியமம் (𑌨𑌿𑌯𑌮)—யோகமுறையிலொன்று.

நிர்வாஹகர் (𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌹𑌕)—முகாமைக்காரர், சரிப்படநடத்துவோர்.

நிரர்த்தகம் (𑌨𑌿𑌰𑌰𑍍𑌥𑌕)—பொருளின்மை.

நிரவத்தியம் (𑌨𑌿𑌰𑌵𑌦𑍍𑌯)—பழிக்கத்தகாதது, தூய்மையானது.

நிவர்த்தித்தல் (𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨)—விட்டு நீங்குதல்.

நிவேசம் (𑌨𑌿𑌵𑍇𑌶)—இடம், பாளயம்.

நிஷ்கண்டகமான (𑌨𑌿𑌷𑍍𑌕𑌣𑍍𑌟𑌕)—சல்லியங்களெல்லாம் தொலைந்த.

நிஷ்கிரமித்தல் (𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌮𑌣)—வெளியிற் செல்லல், அரங்கத்தை விட்டுப்போதல்.

நீராஜநம் (𑌨𑍀𑌰𑌾𑌜𑌨)—ஆலாத்தி.

நேபத்தியம் (𑌨𑍇𑌪𑌥𑍍𑌯)—நாடக பாத்திரங்கள்வேஷம் போட்டுக்கொள்ளுமிடம்

நேபத்தியவிதாநம் (𑌨𑍇𑌪𑌥𑍍𑌯𑌵𑌿𑌧𑌾𑌨)—நேபத்திய சாலைக்குள் செய்யவேண்டிய அலங்காரங்கள்.

நேபத்தியாபிமுகம் (𑌨𑍇𑌪𑌥𑍍𑌯𑌾𑌭𑌿𑌮𑍁𑌖)—திரைக்கெதிரே, நேபத்தியசாலைக் கெதிர்முகமாய்.

நைவேத்தியம் (𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯)—காணிக்கை, கடவுளுக்கு ஸமர்ப்பிக்கும் உணவு.

பக்தி (𑌭𑌕𑍍𑌤𑌿)—கடவுள் பெரியோர் முதலானோரிடத்தில் உண்டாகும் அன்பு.

பகவான் (𑌭𑌗𑌵𑌾𑌨𑍍)—ஷாட்குண்ணிய பரிபூர்ணன், கடவுள்

பங்கஜம் (𑌪𑌙𑍍𑌕𑌜)—தாமரை.

பங்கம் (𑌭𑌙𑍍𑌗)—அசைவு, நாசம்.

பங்குரமான (𑌭𑌙𑍍𑌗𑍁𑌰)—நாசமடையக்கூடிய.

பஞ்சவர்ஷ (𑌪𑌞𑍍𑌚𑌵𑌰𑍍𑌷)—ஐந்து வயது.

பட்டமஹிஷி (𑌪𑌟𑍍𑌟𑌮𑌹𑌿𑌷𑍀)—தலை ராணி.

பத்ததி (வஜதி)—ஒழுங்கு, வழி.

பத்திய வசநம் (வழ்யவவ ந)—ஹிதமான வார்த்தை.

பத்தியம் (வசூ)—பாடல், செய்யுள், வஸீஸபத்தியம்.

பதிதை (வதிதா)—ஒழுக்கங்கெட்டவள்.

பதிவிரதை (வதிவூதா)—கற்புடையவள்.

பந்தம் (வநு)—கட்டு.

பயசீலை (ஹயஶீலா)— அச்சமுடையவள்.

பரம் (வர) —மறுமை, பரலோகம், மோக்ஷம்.

பரதந்திரை (வரதந்த்ரா)—அந்நியனுடைய அதீநத்திலி ருப்பவள், ஸ்வாதீநமில்லாதவள்.

பரதாரம் (வரதார)—பிறத்தியானுடைய ஸ்திரீ, பிறர்மனை யாள்.

பரசு (வரஶு)—கோடாலி.

பரிக்கிரமித்தல் (வரிக்ரமண)—அலைந்து திரிதல், மெள்ள நடந்து போதல்.

பரிக்கிரஹம் (வரிக்ரஹ)—ஏற்றுக்கொள்ளல்.

பரிசாரிகை (வரிசாரிகா)—ஏவல் செய்பவள்.

பரித்தியாகம் ( வரித்யாக)— முற்றுங் கைவிடுதல்

பரிபக்குவம் (வரிவக்வ)—ஏற்றஸமயம், மிகவுந் தகுந்தது.

பரிபூதமான (வரிவூத)—சுத்தமாக்கப்பட்ட.

பரிவாரம் (வரிவார)—ஏவல் செய்வோர், பரிஜநங்கள்.

பல்லம் (ஹல்ல)—அம்பு.

பல்லவம் (வல்லவ)—தளிர், இலை.

பவ்விய (ஹவ்ய)—அழகான, சுபமான.

பவ்வியன் (ஹவ்ய) ஊழியன், அடிமை.

பவஜலதி (஭வஜலதி)—ஸம்ஸாரஸாகரம, பிறப்புக்கடல்.
பஸ்மவிலேபம் (஭ஸ்மவிலேப)—திருநீறு பூசிக்கொள்ளுதல்.
பாசம் (பாஶ)—கட்டு, கயிறு ; அன்பு ; மாயை.
பாணிக்கிரஹணம் (பாணிக்ரஹண)—கைப்பெற்றல், விவாஹம், மணம்.
பாத்திரம் (பாத்ர)—நாடகத்தில் வரபபட்ட ஸ்திரீ புருஷர்.
பாத்திரை (பாத்ரா)—சகுதியானவள், ஏற்றவள்.
பாதிவ்விரத்தியம் (பாதிவ்ரத்ய)—கற்புநெறி.
பாமரன் (பாமர)—அறிவீனன், கீழ்மகன்.
பார்வணை (பார்வண)—பூர்ணிமைதிதியிலுதித்த.
பாரங்கதர் (பாரங்கத)—கல்வி முதலியவற்றிற் கரைகண்டவர், ஸமர்த்தர்.
பாவங்கள் (஭ாவ)—கருத்துகள்.
பாவனை (஭ாவநா)—எண்ணம்.
பாவகம் (பாவக)—பரிசுத்தம், தூய்மை.
பாஷ்பம் (பாஷ்ப)—கண்ணீர்.
பாவித்தல் (஭ாஸந)—பிரகாசித்தல், விளங்குதல்.
பிக்ஷாவந்தநம் (஭ிக்ஷாவந்தந)—ஸந்நியாஸிகள் வீட்டிற்குவந்து சாப்பிடும்படி வணங்கி கேட்டுக்கொள்ளல்.
பிரகாசம் (ப்ரகாஶ)—எளத்துருபலரும் அறியுமாறு வெளிப்படையாய் கூறுதல், முன்னிலைக்கூற்று.
பிரஞ்ஞை (ப்ரஜ்ஞா)—அறிவு.
பிரணதர் (ப்ரணத)—அடிபணிந்தவர்.
பிரணதார்த்திஹரர் (ப்ரணதார்த்திஹர)—தன்னை யடிபணிந்தவர்களின் துயரத்தைப் போக்கடிப்பவர். இஃது தஞ்சை நகரில்திருக்கோயில்கொண்டிருக்கும்விநாயகர்பெயர்.

பிரணய (ப்ரணய)--அன்பு, காதல்.

பிரணய கலஹம் (ப்ரணயகலஹ)—கலவியிற் பிணங்கல்.

பிரணயலீலை (ப்ரணயலீலா)—ஸாரதக்கிரீடை, தலைவனு க்குந் தலைவிக்கும் நடக்கும் நேயவிவாதம்.

பிரத்நம் (ப்ரத்ந)—பழையது, புராதநமானது.

பிரதாநி (ப்ரதாந)—முதன்மந்திரி.

பிரதிக்கிரியை (ப்ரதிக்ரியா)—மாற்றுமருந்து, பதில்செய் தல்.

பிரதிஞ்ஞை (ப்ரதிஜ்ஞா)— ஒட்டம், ஆணை.

பிரதிபந்தம் (ப்ரதிபந்த)—தடை, இடையூறு.

பிரதிபாதித்தல் (ப்ரதிபாதந)—பீடித்தல், ஹிம்ஸித்தல்.

பிரபிதாமஹன் (ப்ரபிதாமஹ)—முப்பாட்டன்.

பிரபை (ப்ரபா)—பேரொளி.

பிரமாதம் (ப்ரமாத)—தவறு, மோசம், அசட்டை.

பிரலாபம் (ப்ரலாப)—புலம்புகை.

பிரவாஹம் (ப்ரவாஹ)—வெள்ளம், பெருக்கு.

பிரவேசித்தல் (ப்ரவேசந)—அரங்கத்துக்குட் புகுதல், உ ள்ளேவருதல்.

பிரஸ்தாவனை (ப்ரஸ்தாவநா)—நாடகத்தின் முன்னுரை.

பிராணாயாமம் (ப்ராணாயாம)—மூச்சையடக்கி ஸ்வாதீனஞ் செய்தல், அஷ்டாங்கத்திலொன்று.

பிராசீந (ப்ராசீந)—பழைய, முற்காலத்திய.

பிராயச்சித்தம் (ப்ராயச்சித்த)—சாந்தி, தண்டனை.

பிராஸம் (ப்ராஸ)—ஈட்டி.

பிருத்தியன் (ப்ருத்ய)—ஊழியன், அடிமை.

பிரேமை ([illegible])—அன்பு.

பீடிகை ([illegible])—முகவுரை.

பீரு! ([illegible]!)—அச்சமுள்ளோய்!

புத்திரகா! ([illegible]!)—அருமைப்புதல்வனே!

புரந்தரன் ([illegible])—இந்திரன்.

புரோக்ஷித்தல் ([illegible])-தெளித்தல், சுத்தஞ்செய்தல்.

புரோத்ஸாஹம் ([illegible])—தூண்டுகோல்.

புளகாங்கிதம் ([illegible])—மயிர்ச்சிலுப்பு, மகிழ்ச்சி.

பூர்வம் ([illegible])—முன்பு, ஆதி.

பூர்வாங்கம் ([illegible])—முன்பு செய்துகொள்ளவேண்டிய காரியம்.

பூர்வாசிரமம் ([illegible]) - முன்னிலை.

பௌரர் ([illegible])—நகரவாசிகள்.

மகுடம் ([illegible])—கிரீடம், தலைமுடி.

மஞ்சம் ([illegible])—கட்டில்.

மதனன் ([illegible])—மன்மதன், காமன்.

மதனபாதை ([illegible])—காமநோய்.

மதிரை ([illegible])—கள், சாராயம்.

மது ([illegible])—தேன்; கள்.

மந்தகமனை ([illegible])—பைய நடப்பவள்.

மனோரதம் ([illegible])—இச்சை, விருப்பம்.

மர்மம் ([illegible])—இரகசியம், உயிர்நிலை.

மர்மபஞ்ஜக ([illegible])—உயிர்நிலையைப் பிளக்கத்தக்கது.

மஹநீயர் ([illegible])—பூஜிக்கத்தக்கவர், சான்றோர்.

மஹாபாகா! ([illegible]!)—உத்தம புருஷரே!

மஹி (மஹீ)—பூமி.

மஹிஷி (மஹிஷீ)—ராணி, அரசி.

மஹிளாஜநம் (மஹிளாஜந)—பெண்கள்.

மஹீஸுரர் (மஹீஸுர)—அந்தணர்.

மாங்கல்லிய பிக்ஷை (மாங்கல்ய பி⁴க்ஷா)—தாலிப்பிச்சை.

மாந்தியம் (மாந்த்³ய)—மப்படைத்தல்.

மானினி (மாநிநீ)—ரோஷமுடையபெண், மானமுள்ளவள்.

மானித்தல் (மாநந)—கநப்படுத்தல், கௌரவப்படுத்தல்.

மித்தியை (மித்²யா)—பொய்; கபடம்; சூது.

மித்திரன் (மித்ர)—நண்பர்; ஸூரியன்.

மிருதப்பிராயம் (ம்ருதப்ராய)—ஏறக்குறைய இறந்துபோன து, வழக்கத்தில் வாராதது.

மிருதுபாஷிணி (ம்ருது³பா⁴ஷிணீ)—மெத்தன மொழிபவள்.

முக்தை (முக்³தா⁴)—மிகவும் தெரிவிளாள்.

முகசித்திரம் (முக²சித்ர)—ஒரு புஸ்தகத்தின் முதலில்லவை த்திருக்கும் படம். (Frontis piece).

முகுரம் (முகுர)—கண்ணடி, பளிங்கு.

முகுளம் (முகுள)—மலரும் பருவத்தரும்பு.

மேதாவி (மேதா⁴வீ)—அறிஞன், புத்தியுள்ளவன்.

யதார்த்தம் (யதா²ர்த²)—சரிமுறை, வாஸ்தவம், உண்மை.

யதார்த்த நாமதேயம் (யதா²ர்த² நாமதே⁴ய)— உண்மைப் பெயர்.

யதீந்திரர் (யதீந்த்³ர)—ஓர் சிறந்த ஸந்நியாஸி.

யதேஷ்டம் (யதே²ஷ்ட)—ஸ்வேச்சை, மிகுதி.

யவனியர் (யவநீ)—யவன தேசத்துப் பெண்கள்.

யுக்மகம் (யுக்மக)—இரண்டு பாக்கள்சேர்ந்து ஒரு பொருள் கொடுப்பது.

யுவதி (யுவதி)—பதினாறு வயதுப்பெண்.

யுவராஜன் (யுவராஜ)—இளவரசன்.

யௌவநம் (யௌவந)—இளமைப்பருவம், அழகு.

ரதநம் (ரதந)—பல்.

ரதி (ரதி)—ஸ்திரீபுருஷர்களின் பரஸ்பர ஸம்போக விஷயமான ஆசை, உவகை; மந்மதன்றேவி.

ரந்திரம் (ரந்த்ர)—சந்து முந்து, முடுக்கு, குழப்பம்.

ரமித்தல் (ரமண)—ஸந்தோஷித்தல், களித்தல்.

ரமை (ரமா)—லக்ஷ்மி; செல்வம்.

ரஸங்கள் (ரஸ)—சுவைகள்; ச்ருங்காராதிரஸங்கள்.

ரஸஞ்ஞர் (ரஸஜ்ஞ)—ரஸிகர், சுவைகளையறிந்தவர்.

ராகாசந்திரிகை (ராகாசந்த்ரிகா)—பூர்ணிமைநிலவு.

ராஜஹம்ஸம் (ராஜஹம்ஸ)—ஓர்வகை அன்னம்; ராஜச்ரேஷ்டர்.

ராஜீவாக்ஷன் (ராஜீவாக்ஷ)—தாமரைக்கண்ணன்.

ராஹுக்ரஸிதம் (ராஹுக்ரஸித) ராஹுவினால் பிடிக்கப்பட்டது.

லக்ஷியம் (லக்ஷ்ய)—குறி, அடையாளம்; மதிப்பு.

லஜ்ஜை (லஜ்ஜா)—வெட்கம், கூச்சம்.

லஹரி (லஹரீ)—வெள்ளம், கடல்.

லேசம் (லேச)—அற்பம், சிறிது, நொய்மை.

லோபம் (லோப)—கெடுதி, குறைவு, நாசம்.

வத்தியஸ்தலம் (வத்யஸ்தல)—கொலைக்களம்.

**வத்ஸலன்** (வத்ஸல)—தயையுள்ளவன், கிருபாளு.

**வதநம்** (வதந)—முகம்.

**வது** (வதூ)—மருமகள், மகன் மனைவி.

**வனிதை** (வநிதா)—பெண், மனையாள்.

**வர்க்கம்** (வர்க்க)—இனம், கூட்டம்.

**வர்ஜிதன்** (வர்ஜித)—நீங்கினவன், அற்றவன்.

**வர்ணம்** (வர்ண)—ஜாதி; நிறம்.

**வரம்** (வர)—மேன்மை, விருப்பம்.

**வரன்** (வர)—மருமகன், கணவன்.

**வராங்கனை** (வராங்கநா)—உருவிற் சிறந்தவள்.

**வராननை** (வராநநா)—அழகிய முகமுடையாள்.

**வல்லபன்** (வல்லப)—அன்பன், காதலன், பிரியன்.

**வாலாரி** (வலாரி)—இந்திரன்.

**வாத்ஸல்லியம்** (வாத்ஸல்ய)—பெண்கள் பிள்ளைகள் முதலானோரிடத்திலுண்டாகும் அன்பு.

**வாரிஜம்** (வாரிஜ)—தாமரை.

**விச்சிரமித்தல்** (விஶ்ரமண)—ஓய்வடைதல், இளைப்பாறுதல்.

**விசுவம்** (விஶ்வ)—உலகம், பிரபஞ்சம்.

**விசுவாஸம்** (விஶ்வாஸ)—நம்பிக்கை.

**விஜயீபவ !** (விஜயீபவ !)—வெற்றிகொண்டோங்குக!

**விஞ்ஞாபித்தல்** (விஜ்ஞாபந)—விண்ணப்பஞ் செய்தல்.

**வினீதன்** (விநீத)—வணக்கமுள்ளவன்.

**விபரீதம்** (விபரீத)—மாறுபாடு.

**விமர்சை** (விமர்ஶ)—ஆராய்வு.

**வியாஜம்** (வ்யாஜ)—சாக்கு, மாயம், தந்திரம், சூது.

**வியாமோஹம்** (வ்யாமோஹ)—காமவெறி.

**விரஹம்** (விரஹ)—பிரிவாற்றுமை.

**விவிதமாய்** (விவித)—பலவிதமாய்.

**விஷாதம்** (விஷாத)—மநத்தளர்ச்சி, துக்கம்.

**விஸ்மயம்** (விஸ்மய)—வியப்பு, ஆச்சரியம்.

**விஹாரம்** (விஹார)—விளையாட்டு, பொழுதுபோக்கல்.

**வீக்ஷணம்** (வீக்ஷண)—பார்வை, நோக்கம்.

**வைதவ்வியம்** (வைதவ்ய)-கைமைத்தனம், விதவையாகுதல்.

**வைராக்கியம்** (வைராக்ய)—வெறுப்பு, ஆசையற்றிருத்தல்

**ஸ்ரீதர்** (ஸ்ரீத)—அடுத்தவர்.

**ஸ்ரீயஃபதி** (ஸ்ரீய:பதி)—ஸ்ரீமஹாவிஷ்ணு.

**ஸ்ரீகரன்** (ஸ்ரீகர)—விஷ்ணு.

**ஸ்ருதம்** (ஸ்ருத)—வேதங்கள், மறைகள்.

**ஸ்ருங்காரம்** (ஸ்ருங்கார)—உவகைச்சுவை.

**ஸகே !** (ஸகே !)—நண்பா !

**ஸங்கல்பம்** (ஸங்கல்ப)—எண்ணம்.

**ஸங்குலம்** (ஸங்குல)—சூழப்பட்டது, வியாபிக்கப்பட்டது, கலந்துள்ளது,

**ஸசிவன்** (ஸசிவ)—மந்திரி, அமைச்சன்.

**ஸத்பதங்கள்** (ஸத்பத)—ஆகாயமார்க்கங்கள்; நல்வழிகள்.

**ஸததம்** (ஸதத)—எப்பொழுதும்.

**ஸதி** (ஸதீ)—கற்புடையாள்; மனைவி.

**ஸந்ததம்** (ஸந்தத)—எக்காலத்திலும்.

ஸந்ததி (𑌸𑌂𑌤𑌤𑌿)—பெண்பிள்ளைகள் ; வம்சம்.

ஸந்நத்தம் (𑌸𑌂𑌨𑌦𑍍𑌧)—போர்க்காயத்தம்.

ஸந்நிதி (𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌿)—ஸமுகம், மூலஸ்தானம்.

ஸநாதநம் (𑌸𑌨𑌾𑌤𑌨)—பழமையானது.

ஸபலம் (𑌸𑌫𑌲)—பயனுள்ளது.

ஸம்ஸ்காரம் (𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰)—மந்திரத்தினல் சுத்தம்பண்ணுகிற சடங்குகள்.

ஸர்வஸ்வம் (𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌵)—யாவற்றும், முழுஆஸ்தி.

ஸரோருஹம(𑌸𑌰𑍋𑌰𑍁𑌹)—தாமரை.

ஸஹபாடி (𑌸𑌹𑌪𑌾𑌠𑍀)—கூடப்படித்தவன்.

ஸாங்கோபாங்கமாய் (𑌸𑌾𑌙𑍍𑌗𑍋𑌪𑌾𑌙𑍍𑌗𑌮𑍍)—எல்லாஉறுப்புகளோடுங் கூடியதாய், ஸமக்கிரமாய்.

ஸாத்துவஸம் (𑌸𑌾𑌧𑍍𑌵𑌸)—பயம், அச்சம்.

ஸாது ! (𑌸𑌾𑌧𑍁 !)—நன்று !

ஸாம்பராயம் (𑌸𑌾𑌂𑌪𑌰𑌾𑌯)—போர், யுத்தம்.

ஸார்த்தகம் (𑌸𑌾𑌰𑍍𑌥𑌕)—பொருளுக் கொத்தது.

ஸார்வஜநோத்தியாநம் (𑌸𑌾𑌰𑍍𑌵𑌜𑌨𑍋𑌦𑍍𑌯𑌾𑌨)-எல்லோரும் விநோதார்த்தமாய்போகக்கூடியதோட்டம். இஃது 'People's Park' என்று வழங்கப்படும்.

ஸாஹஸம் (𑌸𑌾𑌹𑌸)- கொடுந்துணிவு, பேய்த்துணிச்சல்.

ஸித்தர் (𑌸𑌿𑌦𑍍𑌧)—யோகஸித்தி பெற்றவர்.

ஸுகுமாரன் (𑌸𑍁𑌕𑍁𑌮𑌾𑌰)—அழகானவன்.

ஸுபகநேத்ரீ (𑌸𑍁𑌭𑌗𑌨𑍇𑌤𑍍𑌰𑍀)—அழகான கண்ணுடையவள்.

ஸுரை (𑌸𑍁𑌰𑌾)—கள்.

ஸூத்திரதாரன் ([illegible])—நாடகத்தின் கண் எதற்கும் முதல்வனாய் வினைகளை முடிக்கும் நடன்.

ஸேசம் ([illegible])—தண்ணீர்ப் பாய்ச்சல்.

ஸைந்தவன் ([illegible])—ஸிந்துவ மஹாராஜருடைய புதல்வன்.

ஸௌஜந்யம் ([illegible])—நன்னடக்கை.

ஸௌந்தரியம் ([illegible])—அழகு.

ஸ்தாபித்தல் ([illegible])—நிலைநாட்டுதல்.

ஸ்பர்சம் ([illegible])—தொடுதல்.

ஸ்பூர்த்தி ([illegible])—மனமலர்ச்சி, மனக்களிப்பு.

ஸ்மரணை ([illegible])—நினைவு கூறுகை.

ஸ்மராரி ([illegible])—மன்மதாந்தகன், சிவன்.

ஸ்மிருதி ([illegible])—தர்மசாஸ்திரம், நினைவு.

ஸ்வப்னம் ([illegible])—கனவு.

ஸ்வீகரித்தல் ([illegible])—அங்கீகரித்தல், ஏற்றுக்கொள்ளல்.

ஹஸ்தி ([illegible])—யானை.

ஹதவிதியே! ([illegible])—கெட்டகாலமே!

ஹந்த! ([illegible])—கஷ்டம்! அந்தோ!

ஹம்ஸம் ([illegible])—[illegible].

ஹாநி ([illegible])—குறைவு, நாசம்.

ஹாஸ்யம் ([illegible])—நகை.

ஹேது ([illegible])—காரணம்.

# அநுபந்தம் II.

கலியுகராஜ விருத்தாந்தம், நவஸாஹஸாங்க சரிதகாவ்யம், விக்ரமாங்கதேவ சரிதம், பாரிஜாத மஞ்ஜரி, ராஜதரங்கிணி, போஜப்பிரபந்தம், ப்ராசீநலேகமாலா, இண்டியென் ஆண்டிக்வெரி, எபிக்ராபியா இண்டிகா முதலிய கிரந்தங்களின்படிக்கு இந்நாடகத் தலைவராகிய

ஸ்ரீ போஜராஜ தேவருடைய

வம்சாவளி.

பரமார பரமேச்வரர் என்னும்
ஸ்ரீ கிருஷ்ணராஜதேவர்.

|

வஜ்ரடஸ்வாமி என்னும்
ஸ்ரீ வைரிஸிம்ஹதேவர்.

|

ஹர்ஷதேவரென்னும்
ஸ்ரீ ஸீயகதேவர். (இ. பி. 950 - 974)

|

ஸிந்துலபடரென்னும்
ஸ்ரீவாக்பதிராஜதேவர்.
(இ.பி. 974-994)

வீரநாராயணர் அமோகவர்ஷர் வாக்பதிராஜர்
வல்லபநரேந்திரரென்னும்
ஸ்ரீ முஞ்ஜராஜதேவர்.
(இ.பி. 1000-1014)

குமாரநாராயணர் வீரருத்ரதேவர்
நவஸாஹஸாங்கர் விக்கிரமாதித்தியரென்னும்
ஸ்ரீ ஸிந்துலராஜதேவர்.
(கி. பி. 994-1000)
|
ஸ்ரீ போஜராஜதேவர்.
(கி. பி. 1014 1070)
|
[illegible]போஜரென்னும் உதயாதித்தியதேவர் (கி. பி. 1070-1104).
|
நகபோஜரென்னும் நரவர்மதேவர் (கி. பி. 1104-1133).
|
டிண்டிம போஜரென்னும் யசோவர்மதேவர் (கி. பி. 1133-1138).
|
கல்யாண போஜரென்னும் அஜயவர்மதேவர் (கி. பி. 1138-1160).
|
பிரஸந்த போஜரென்னும் விந்த்யவர்மதேவர் (கி. பி. 1160-1180).
|
தந்யபோஜரென்னும் ஸுபடவர்மதேவர் (கி. பி. 1180-1211).
|
அர்ஜுநபோஜரென்னும் அர்ஜுநவர்மதேவர் (கி. பி 1211–1260).

# அநுபந்தம் III.



இந்நாடகத்தின் ௧௫௩, ௧௫௪, ௧௫௫ - வது பக்கங் களில் உதஹரித்திருக்கும் ஸம்ஸ்கிருத சாஸந பத்திரிகையின் மொழி பெயர்ப்பு.



தாரா நகருக்கதிபதியாகிய

## ஸ்ரீமுஞ்ஜராஜருடைய சாஸந பத்திரம்.



ஜகதேக வீரரும், பலதேவருக்கு ஸமானமான விசேஷ புஜபல பராக்கிரமத்தையுடையவரும் எப்பொழுதும் யாசகருக்குக் கேட்டதைக் கொடுப்பதில் சம்பாதிப்பதைக்கூட மிஞ்சினவருமாகிய ஸ்ரீமுஞ்ஜராஜர் வெற்றிகொண்டோங்குகின்றார்!

யாவரொருவர் ஸமஸ்தமான யாசகர்களின் மனோரதத்தைப் பூர்த்திசெய்வதில் ஸாக்ஷாத் கல்பவிருக்ஷம் போன்றவரோ, தனக்கு எதிரிகளாய் நிற்கும் அரசர்களின் ஸம்பத்தைப் பலாத்காரமாய் யுத்தஞ்செய்துப் பிடுங்கிக்கொள்வதில் ஆக்ரஹமுள்ளவரோ, அப்படிப்பட்ட ஸ்ரீவாக்பதிராஜர் வெற்றிகொண்டோங்குகின்றார்!

பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேச்வர ஸ்ரீகிருஷ்ணராஜதேவர் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேச்வர வஜ்ரட ஸ்வாமி என்று பிருதுபெயர் பூண்ட ஸ்ரீவைரிஸிம்ஹதேவரின் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேச்வர ஹர்ஷதேவரென்று பிருதுபெயர் பூண்ட ஸ்ரீஸீயகதேவரின் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேச்வர ஸிம்ஹபடர் என்று பிருதுபெயர் பூண்ட ஸ்ரீவாக்பதிராஜ தேவரின் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேச்வர விரருத்ரதேவர், குமார நாராயணர், நவஸாஹஸாங்கர், விக்ரமாதித்யர் என்று பிருதுபெயர்கள் பூண்ட ஸ்ரீஸிந்துராஜ தேவரின் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேச்வர ஸ்ரீமந்மோகவர்ஷர், வாக்பதிராஜ தேவர் என்று பிருதுபெயர்கள் பூண்ட ஸ்ரீமுஞ்ஜராஜ தேவராகிய பிருத்வீவல்லப ஸ்ரீவல்லபநரேந்திர தேவர், உபயகுசலோபரி, ஸ்ரீதாரா நகரில் விஜயஞ் செய்திருக்கும் யசோபடர் என்று பிருது பெயர் பூண்ட ரமாங்கதருடைய மூத்த குமாரரும் ஸர்வஸேநாத்யக்ஷருமான வத்ஸராஜருக்குக் கட்டளையிடுவது யாதெனில்:— எமது தமையனார் குமாரன் போஜன், தனது வேசியினுடைய வார்த்தையைக் கேட்டுக்கொண்டு, தனது தர்மபத்நியாகிய விலாஸவதியை ஒரு காரணமுமின்றி விஷங்கொடுத்துக் கொல்லமுயன்றன

னென்பது நன்றாய்த் தெரிந்திருக்குமே. ஆகலின் யாம் ஸாக்ஷிகளைக்கொண்டு விசாரணைசெய்து,—

"ஆசார்யனையும், பாலனையும், விருத்தனையும், ஸகல வேதங்களையும் அத்தியயநஞ் செய்திருக்கும் பிராம்மணனையும், ஆததாயியாய் வருபவனை யோசிக்காமலே கொல்லலாம்" என்றும், "நெருப்பு வைத்துக் கொளுத்துபவன், விஷம் வைத்துக் கொல்லுபவன், கையில் சஸ்திரங்கொண்டு எதிர்ப்பவன், பணத்தை பலாத்காரமாய்க் கொள்ளையடிப்பவன், க்ஷேத்திரத்தை யபஹரிப்பவன், பார்யையை யடித்துக்கொண்டு போகிறவன் இவ்வாறுவரும் ஆததாயிகள்" என்றும்; அன்றியும், "கையில் கத்தி யேந்தியோ விஷம் வைத்தோ கொல்பவனும், சாபங் கொடுப்பதற்குக் கையெடுப்பவனும், அதர்வண மந்திரங்களினாற் றுன்பம் வைப்பவனும், ராஜத்துரோகஞ் செய்பவனும், பார்யையை திரஸ்காரஞ் செய்பவனும், எப்பொழுதும் பிறர்மீது கோழி சொல்பவனும், இன்னும் இவைகளைப் போன்றவரையும் ஆததாயிகள் என்றே அறிதல் வேண்டும்" என்றும், "வெளிப்படையாகவோ ரஹஸ்யமாகவோ ஆததாயியைக் கொல்லுவதில் கொல்பவனுக்கு யாதொரு தோஷமுமில்லை" என்றும்,—

ஸகல தர்மசாஸ்திரங்களின் பிரமாணங்களையும் அறிந்து, போஜனது தலையை வாங்கிவிடும்படி தீர்மானஞ் செய்திருக்கின்றோம். ஆகலின், நீ வெகு ஜாக்கிரதையுடன், போஜனை ஒருவருக்குந் தெரியாமல் புவ

நேச்வரியின் வநத்திர்க்கு அழைத்துக்கொண்டுபோய் அவனது தலையை வாங்கிவிட்டு, அத்தலையையும் இவ்விரவிற்குள்ளேயே எமது அந்தப்புரத்திற்குக் கொண்டுவந்து எம்மிடம் ஒப்பிவிக்கவேண்டியது. இப்படிக்கு விக்கிரம சகாப்தம் ஆயிரத்தி அறுபத்தொன்பதாவது வருஷத்தில் கார்த்திகைமாதம் சுக்லபக்ஷ சதுர்தசியில் ஸ்ரீ தாராநகரில் விஜயங் கொண்டெழுந்தருளியிருக்கும் யாம் சாஸநபத்திர மூலமாய்த் தெரியப்படுத்துவது. ஸ்ரீ முஞ்ஜராஜதேவருடைய ஸ்வஹஸ்த லிகிதம்.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௪ | 7 | தேவராஜ ! | ராஜதேவ ! |
| ௨௦ | 15 | நல்லவு | நல்லவுந் |
| ௨௪ | 13 | ஆஸநத்லை | ஆஸநத்தை |
| ௨௯ | 4 | கழலிணை | கழலிணே |
| | 22 | நெரம் | நேரம் |
| ௩௩ | 4 | வேறேரு | வேறொரு |
| ௫௫ | 23 | படுததி | படுத்தி |
| ௫௭ | 14 | சுத்தை | சுத்த |
| ௭௪ | 20 | கையிவிருந்து | கையிலிருந்து |
| ௮௪ | 16 | பெற்று | பேற்று |
| ௮௯ | 29 | சொல்வி | சொல்லி |
| ௧௦௪ | 3 | வித்வான | வித்வான் |
| ௧௧௪ | 24 | உததர | உத்தர |
| ௧௨௪ | 23 | கூடாது.) | கூடாது. |
| ௧௨௫ | 3 | சோல்மேறன் | சொல்மேறன் |
| ௧௨௮ | 27 | புந்திஸாகர | புத்திஸாகர |
| ௧௩௦ | 16 | எள்ளி | எண்ணி |
| ௧௩௨ | 5 | விரபாாதி | விரபுராதி |
| | 25 | உலக | உலகி |
| ௧௩௯ | 4 | திருப்பி | திரும்பி |
| ௧௩௭ | 11 | கீர்த்தாட்கூஷிண் ணிய | கீர்த்தாகூஷிண்ணிய |
| ௧௪௦ | 9 | (விவேகி | விவேகி |
| | 11 | ஆஆ?) | ஆஆ ! |
| ௧௪௯ | 27 | க்காரிகையோ | அக்காரிகையோ |
| ௧௫௧ | 10 | சித்திரைக்கால | சித்திரைக்ககால |
| ௧௬௯ | 23 | நலமெண | நலமெணத் |
| ௧௯௮ | 20 | புண்ணிய | புண்ணிய |
| ௧௭௨ | 2 | மோன்று | மொன்று |
| ௧௭௯ | 1 | முறையாதீர் | முறையாதீர் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| ௧௭௪ | 14 | யாய் | துணையாய் |
| ௧௭௫ | 24 | **யாழ்வ** | **யாள்வ** |
| ௧௭௬ | 17 | **மாணவமோ** | **மாணவவோ** |
| ௧௮௬ | 3 | அப்பறம் | அப்புறம் |
| ௧௮௯ | 7 | பணிபவதற்கு | பணிபவற்கு |
| ௧௯௫ | 16 | யசோவர்ம | சங்கபால |
| ௨௧௬ | 29 | ஆத்மகதமாய்) | (ஆத்மகதமாய்) |
| ௨௧௮ | 15 | போர் குளிர்ந்த | போற் குளிர்ந்த |
|  | 27 | (ஆத்மகதமாய் | (ஆத்மகதமாய்) |
| ௨௨0 | 12 | தில் | த்தில் |
| ௨௨௧ | 3 | செவி | (செவி |
|  | 10 | விட்விட்டு | விட்டுவிட்டு |
| ௨௨௪ | 15 | பாாகள் | பார்கள் |
|  |  | இரண்டணையம் | இரண்டணையும் |
| ௨௩0 | 25 | பார்த்தா | பர்த்தா |
| ௨௩௩ | 22 | ஐயா ! | ஐயோ ! |
| ௨௩௫ | 25 | ஜன்பத்தை | **ஜந்மத்தை** |
| ௨௩௬ | 25 | யாததும | யாததும் |
| ௨[illegible]0 | 1 | மற்றொுவ | மற்றொருவ |
| ௨௪0 | 11 | **செவ்ழிதழ்** | **செவ்விதழ்** |
| ௨௪௧ | 22 | சணெ ணுற்று | கண்ணுற்று |
| ௨௪௨ | 8 | தள்ளி | தள்ளிப் |
| ௨௪௪ | 8 | பரப்பரப்பு | பரபரப்பு |
|  | 21 | கடித்து | நடித்து |
| ௨௪௬ | 11 | **உடலும்** | உடலம் |
| ௨௪௭ | 14 | போஙன்றேன் | போகின்றேன் ! |
| ௨௪௮ | 21 | சொல்லு | செல்லு |
| ௨௫0 | 5 | நன்மைக்காவே | நன்மைக்காகவே |
|  | 15 | சொல்வோம் | செல்லுவோம். |
| ௨௫௧ | 23 | **வயிற்றில** | **வயிற்றில்** |
| ௨௫௯ | 3 | **மிரம** | **பிரம** |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨௬௫ | 7 | தர்மயத்தினி | தர்மபத்தினி |
| ௨௭௨ | 19 | அவரகளை | அவர்களை |
| ௨௭௬ | 23 | யிருக்கிறுன் | யிருக்கிறுன். |
| ௨௭௮ | 17 | உண்ணை | உன்னை |
| ௨௮௧ | 17 | பிரணனை | பிராணனை. |
| ௨௮௩ | 18 | யனிதற்கோ | யானிதற்கோ |
| ௨௯௧ | 26 | செயும் | செய்யும் |
| ௨௯௮ | 3 | சொன்று | கொன்று |
| ௩௦௬ | 1 | அன்றிரவிகற்ண்ட | அன்றிரவிற்கண்ட |
| | 5 | பேசி | பேசிக் |
| ௩௧௩ | 18 | ஸாதுகளுக்கு | ஸாதுக்களுக்கு |
| ௩௧௫ | 9 | தேண்டும்! | வேண்டும்! |
| ௩௧௬ | 10 | ஏன் | என் |
| ௩௧௭ | 18 | விளக்கு | விளங்கு |
| | 26 | வித்தியம் | வித்யம் |
| ௩௨௦ | 25 | எப்படிங் | எப்படித் |
| ௩௨௨ | 18 | ஸோம | (ஸோம |
| ௩௨௭ | 26 | எஸ்று | என்று |
| ௩௩௩ | 4 | யண்ணி | பண்ணி |
| ௩௩௪ | 3 | உளளே | உள்ளே |
| ௩௩௬ | 14 | ரமபிவ்ட்டீ | ரமபிவ்ட்டீ |
| ௩௩௭ | 7 | யேயா | யோவா |
| | 9 | தந்நம! | தந்நமம! |
| ௩௩௯ | 5 | பாரயோ? | பாராயோ? |
| ௩௪௩ | 5 | கொணடு | கொண்டு |
| | 11 | ஸ்ரீக்ஷ்வா | ஸ்ரீக்ஷ்வா |
| | 12 | நிவ தஃதெ | நிவ தஃதே |
| ௩௪௬ | 2 | சொல்லு | செல்லு |
| ௩௪௭ | 26 | சோகராக்கிர | சோகாசகிர |
| ௩௪௯ | 16 | புவப்பர்! | யுவப்பர்! |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | 18 | எனையேர்க்கும் | எனையோர்க்கும் |
| ௧௫௰ | 3 | நீங்ளே | நீங்களே |
| ௧௫௮ | 7 | ஸமதாநம் | ஸமாதாநம் |
| ௧௫௯ | 16 | மிருந்தேன் ? | மிருந்தேன் ? |
| ௧௬௨ | 27 | கேட்டே | கெட்டே |
| ௧௭௰ | 9 | லீலாவகி | லீலாவதி |
| ௧௭௨ | 4 | ஸேகவன் | ஸேவகன் |
| | 7 | ஐய | (ஐய |
| | 10 | வீற்ரிரு | வீற்றிரு |
| ௧௭௪ | 2 | சொவ்லு | சொல்லு |
| ௧௭௭ | 20 | அனறேல் | அன்றேல் |
| ௧௮௧ | 24 | தககவ | தக்கவ |
| ௧௮௪ | 8 | கருணையுடன | கருணையுடன் |
| [illegible] | 3 | மூண்ணாலம் | மூண்ணலாம் |
| ௧௯௧ | 12 | பண்ணிலும | பண்ணிலும் |
| ௧௯௪ | 14 | லென்றாலும் | லென்றுலும் |

WORKS PUBLISHED UNDER THE

# Vidvan Mano Ranjani Series.

1. Bhoja Charitram: An Original Historical Drama in Tamil, by T. S. Narayana Sastry B.A., B.L., Second Edition, very strongly bound and attractively finished with 16 full-page illustrations.

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| Ordinary Edition—(Bound in half-calico with half-tone block illustrations). ... | 1 | 8 | 0 |
| Special Edition—(Printed on superior paper and Bound in half-leather, with half-tone block illustrations) ... | 2 | 0 | 0 |
| Extra-Special Edition—(Printed on superior paper and bound in half-leather, covered with a loose paper wrapper for protection and decorated on sides and backs with gold and coloured designs with actual photographic illustrations)... | 3 | 8 | 0 |

2. Kumudâ: A drama in English, by M. Krishnamacharya, B.A., L.T. ... 0 8 0

3. Dasaratha: A drama in English, by M. Krishnamacharya, B.A., L.T. ... 0 8 0

4. Portraits from Indian Classics, by M. Krishnamacharya, B.A., L.T. . 0 8 0

5. Vaidehî Vivâsanam or the Exile of Sîtâ, with a prologue to Uttararâmacharita in Sanskrit, by T. S. Narayana Sastry, B.A., B.L. ... ... ... 0 3 0

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| 6. Srîharsha the Dramatist; A Criticism in English on Srîharsha, the author of Ratnâvalî and other dramas with an introduction in Sanskrit on the Origin of Sanskrit Dramas, by T. S. Narayana Sastry, B.A., B.L. .. ... | 0 | 8 | 0 |
| 7. Sanskrit Literature: A Compendium on Sanskrit Literature, by M. Krishnamacharya, M.A., B.L. ... .. | 1 | 0 | 0 |
| *8. Sakuntala: Translated from Kâlidâsa's Abhijñana Sâkuntala into Tamil Prose and Poetry illustrated with an introduction on Indian Dramaturgy, by T. S. Narayana Sastry B.A.; B.L. | | | |
| *9. Hemarâta: or Shakespere's Hamlet translated into Sanskrit Prose and Poetry with illustrations, by T. S. Narayana Sastry B.A.; B.L, | | | |
| *10. Sâvitrî: A highly moral drama in Tamil written on the model of Sanskrit Plays, by T. S. Narayana Sastry B.A.; B.L. | | | |
| *11. Satya Harischandra: An original Purânic Drama in Tamil, by T. S. Narayana Sastry B.A.; B.L., | | | |

* These are in the Press.

*N.B.*—Copies of these books can be had of the Manager, Vidvan Mano Ranjani Office, No. 44, Chengalaneer Pillaiyar Kovil Street, George Town, Madras.

## OTHER WORKS

BY

# The Members of the Vidvan Mano Ranjani.

### TELUGU.

**BY V. VENKATARAYA SASTRIYAR AVARGAL.**

| | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|
| 1. | Ushâ : An Original drama ... | 0 | 12 | 0 |
| 2. | Pratâparudrîyamu : Do. (Paper) ... | 1 | 0 | 0 |
| | (Calico) ... | 1 | 4 | 0 |
| 3. | Nâgânandamu : Translated from Sanskrit. ... ... ... | 0 | 8 | 0 |
| 4. | Sâkuntalamu : Translated from Sanskrit. ... ... ... | 0 | 12 | 0 |
| 5. | Kathâ Sarit Sâgaramu : Translated from Sanskrit. ... | 5 | 0 | 0 |
| 6. | Grâmya Bhâshâ Prayoga Nibandhanamu... ... ... | 0 | 8 | 0 |
| 7. | A'ndhra Prasanna Râghava Nâtaka Vimarsamu... ... | 2 | 0 | 0 |

### TAMIL.

**BY V G. SURYANARAYANA SASTRIYAR, B.A.**

| | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|
| 1. | Kalâvatî : An original Drama— (Board) ... | 1 | 8 | 0 |
| | (Calico) ... | 1 | 12 | 0 |
| 2. | Rûpâvatî : „ ... | 1 | 0 | 0 |
| 3. | Dasarathan Tavaru „ ... | 0 | 4 | 0 |
| 4. | Nâtakaviyal : A work on Dramaturgy .. ... ... ... | 0 | 8 | 0 |